

திருநெல்வேலி ஸ்ரீ நெல்லையப்பர் கோவில் விஷ்ணு நந்தி

ஓம்

திருச்சிற்றம்பலம்.

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது.

| | | |
|---|---|---|
| சிலம்பு உ. | மெய்கண்டான் ஆண்டு-எாக ஆவணித் திங்கள் 1924ஞ ஆகஸ்டு—செப்டம்பர்மு | பரல் ௨. |


திருச்சிற்றம்பலம்.

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே

திருச்சிற்றம்பலம்.

---

## திருஞானசம்பந்தர் தேவாரம் இயற்கைப்பொருளழகு

(உகஎ-ம் பக்கத் தொடர்ச்சி)

நமதாசிரியரது சில திருப்பாட்டுக்களில் காதற் சுவை கனிந்து விளங்குகின்றது. தமது பெண்டிரோடு கூடி விளையாடு வதில் குரங்குகள் வேட்கையுடையன என்பது,

"குரக்கினம் விரைப் பொழிலின்மீது கனியுண்டு
பரக்குறு புணர்ச்சிசெய் விளையாடு பழுவூரே",

திருப்பாடல்களில் மிகுதியும் பயின்று வருகின்ற சிறு பறவை, வண்டாம். பெண்வண்டு புன்னைப் பூவின் கருந் துகளில் திளைத்தாடும் தனது தலைவனைக் கண்டு பிறிதொரு வண்டினிடம் தலைவன் காதல் கொண்டதாக நினைத்துச் சினங்கொண்டு சோலையின் ஒரு புறம் மறைந்து அவனோடு ஊடல் கொள்ளுவதாகக் கூறும் பகுதி மிக நயமுடையது.

"மாதர்வண்டு தன்காதல் வண்டாடிய புன்னைத்
தாதுகண்டு பொழிலின் மறைந்தூடு சாய்க்காடே".

மானும் மயிலும் உள்ளத்தையும் காட்சியையும் தாமே மகிழ்விக்குந் திறமையன. அவைகள் தமது துணைகளோடு இலை செறிந்த பசும்பொழில்களிற் கூடியாடும் சிறப்பு பின் வரும் அடிகளிற் கூறப்பட்டிருக்கிறது.

"கலையினுர் மடப்பிணை துணை யொடுதுயிலக்
கானலம் பெடை புல்கிக் கணமயிலாலும்
இலையினுர் பைம்பொழில்"

மென்மையும் அறிவும் மிக்க அன்னம் காதல் மிகையால் செய்யும் நகையுறு செயல் பின்வரும் அடிகளிற் குறிக்கப்பட்டிருக்கிறது. அறிவாளரும் காதலால் அறிவிழப்பர் என்பது குறிப்பு.

"ஏழை வெண் குருகய லேயிளம்பெடை தனதெனக் கருதித்
தாழை வெண்மடற் புல்குந் தண்மறைக் காடுறை மைந்தர்"

இதனுள் அன்னமானது தாழையின் வெண்மடலை பெண் குருகென்றுமயங்கி அதனைப்புணருஞ் செயல் காண்க. தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவாற்றாமை காரணமாக மக்களையேயன்றி அஃறிணைப்பொருள் பலவற்றையும் நெஞ்சினையும் தலைவனிடத்தே தூது விடுதல் பண்டைவழக்கு. அது,

"ஞாயிறு திங்க ளறிவே நாணே
கடலே கானல் விலங்கே மானே
புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே

அவையல பிறவு நுவலிய நெறியாற்
சொல்லுந போலவுங் கேட்குந போலவும்
சொல்லியாங் கமையு மென்மனார் புலவர்'' என்பதால் விளங்கும்

ஆசிரியர் திருப்பாட்டுக்களில் நயமிக்க பலவகைப் பறவைகளைத் தூது விடுதல் காணப்படும். கிளியுரை:—

''சிறையாரு மடக்கிளியே யிங்கேவா தேனொடுபொன்
முறையாலே யுணத்தருவேன் மொய்பவளத் தொடுதரளந்
துறையாருங் கடற்றோணி புரத்தீசன் றுளங்குமிளம்
பிறையாளன் றிருநாம மெனக்கொருகாற் பேசாயே''

வீட்டிலே வளருங் கிளிகள் தலைவன் முதலியோர் பெயரைச் சொல்லும் பழக்க முடையது ஆதலினாலும் தலைவன் பெயரைத் தான் கூறவொண்ணாமையால் அதனைப் பலர்கூறக் கேட்டு இன்புறுதல் தலைவிக்கு இயல்பாதலினாலும் கிளியினைத் தலைவர் பெயர் கூறும்படி இதனுள் தலைவி வேண்டி நின்றமை காண்க.

தலைவன் பெயர்கூறுவான் ஊக்கமளித்தற் பொருட்டு அழகிய சிறகும் இளமையும் உடையதாகக் கிளி புகழ்ந்துரைக்கப் பட்டது. தலைவன் பெயரைச் சொல்லுகின்ற நாவிற்கு இனிய உணவு அளிக்குங் கருத்தினால் தேனும் பாலும் சுவை மிகப் பயக்கும் அளவாகக் கலந்து தருதல் கூறப்பட்டது.

தலைவனுடைய திருநாமமும் அவ்வாறு இனிமை பயக்கும் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.

நெய்தல் நிலமாகிய கடற்கரை பரிவுறுதற்கு இடமாதலின் அப்பரிவு தீரும் வண்ணம் தலைவன் பெயர் கேட்டல் விரும்பப் பட்டது. கிளியானது காமக்கடவுளுக்கு வாகன மாதலுங் காண்க. இள நிலவு காணுந் தோறும் பிரிவுற்றாரதுள்ளம் துளங்குதலின் 'துளங்கு மிளம்பிறை' என்றார். இறைவனுடைய திருமேனி செம்பவளமும் அவரின் திருநீற்றின் ஒளி முத்தின் ஒளி போலவும் இருப்பதால் நிறைந்த பவளமும் முத்தும் கலந்து வருங் காட்சி இறைவனை நினைவூட்டுந் தன்மை

யது. கடலிலே செல்வது தோணியாகலின் 'கடற்றோணிபுரத் தீசன்' என்றிருப்பதும் உணர்க. ஆர்வமிக்க தலைவிக்கு தலைவன் திருநாமத்தை ஒருமுறை கேட்டாலும் அளவில் மகிழ்ச்சி தருவதாதலால் "திருநாமமெனக் கொருகாற் பேசாயே" என்றார். கிளிகற்பித்தபடி தலைவனது பெயர்கூறும் ஆற்றலுடையதெனினும் தலைவனைவா வென்று கூவும் ஆற்றல் குயிலுக்கு மிகுதி. குயிலானது பால்மணமிக்க பூவுடைய மாவின் தளிர்களைக்கொத்திக் கொண்டு சோலையிலே இனிமை பயக்கத்தக்க மொழி கூறுந் தன்மையது.

இளங்குயிலும் மாந்தளிரும் காமக் கடவுளுக்குரிய இளவேனிற்காலச் சிறப்புப் பொருள்கள். குயிலின் ஓசையானது தனது தலைவனுக்கு மாத்திர மல்லாமல் பிறர்க்கும் இன்பந்தர வல்லது. தலைவன் வீற்றிருக்கும் திருத்தோணிபுரத்தின் பாங்கருள்ள பொழில்களிலே மிகுதியும் பயின்றமையால் தலைவன் உவப்பிற் குரியன. ஆதல்பற்றி தலைவனைத் தன்னிடம் வரும்படி அழைப்பதற்குத் தக்க வாயிலாகிய குயிலினைத் தூதாக விடுமுறையினை வரும் பாட்டுக்களிற் காண்க.

"பாறுறு மலர்ச் சூதப் பல்லவங் களவை கோதி
ஏனோர்க்கு மினிதாக மொழியு மெழிலிளங்குயிலே
தேனாரும் பொழில் புடைசூழ் திருத்தோணி புரத்தமரர்
கோனாரை யென்னிடைக்கே வரவொருகாற் கூறாயே"

நெய்தல் நிலத்திற்குரிய அன்றில் அன்னம் முதலியன தமது பெண்டிரொடு கூடிவாழுகின்ற காட்சி பிரிந்துறையுந் தலைவிக்கு மிகுதியுந் துயர்தருவதாகலின், அவற்றை நோக்கி அகன்று போய்த் தமது தலைவனிடத்தில் தலைவி தன்னுடைய துன்பத்தை உணர்த்தும்படி வேண்டுகின்றாள்.

"பொன்னம்பூங்கழிக் கானற் புணர் துணையோ டுடன்வாழு
மன்னங்கா ளன்றில்கா ளகன்றும் போய் வருவீர்கள்
..........................................
..................................எனதல்லலுரையீரே"

இங்ஙனம் கூறும் பாட்டுக்களில் உள்ளுறை உவமமும், இறைச்சிப் பொருளும் பல இடங்களில் நயந்தருவன. அவை விரிப்பிற் பெருகும். இறைவன் வீற்றிருக்கும் திருப்பதியைத் தூரத்திலே கண்ட அளவிலே தனது தலைவனது திருப்பதி யென்று அதனை விதந்து கூறும் நயம் பாராட்டத்தக்கது.

''சிந்தை யிடையார் தலையின் மிசையார் செஞ்சொல்லார்
வந்துமாலை வைகும் போதென் மனத்துள்ளார்
மைந்தா மணாளா வென்ன மகிழ்வா ரவர்போலும்
பைந்தண் மாதவி சோலைசூழ்ந்த பாசூரே''

கா. சுப்பிரமணிய பிள்ளை, M. A, M. L.

---

# முற்காலமுந் தற்காலமும்

'முற்காலமே நற்காலம்; இறந்ததே சிறந்தது; சென்றனவே நல்லன' என்று நினைப்போர் நம் நாட்டிற் பெரும்பான்மையராக லின், அவர் கருத்தைப் பகுத்துநோக்கி யுண்மைகாண்டல் பலர்க் கும் பயன்தரும் என்ற நோக்கம்பற்றி இவ்வாராய்ச்சி எழுந் தது. இதில் அனைவரும் ஒப்பத்தகுந்த ஒரு முடிபிற்கு வருவது இயலாததே. எடுத்துக் கொண்ட ஆராய்ச்சியின் நோக்கத்திற் கும், எழுதப்புகுவோரின் அறிவு அனுபவங்கட்கும் ஏற்ப நியா யங்களையும் உதாரணங்களையும் எடுத்தாள முடியுமேயன்றி, பலவாறாகத்தோன்றும் ஐயத்திற் கெல்லாம் விடைகூறிச் செல்லு மாறில்லை. இதனைக் கண்ணுறும் நண்பரிற் பலரோ அன்றிச் சில ரோ எமது முடிவுக்கு முரண்படலாம். அதுவே இவ்வாராய்ச்சி யைக் குற்றமுடைத்தாக்காது. கருத்து வேறுபாடின்றேற் கக்ஷிபேதமில்லை; அஃதின்றேல் ஆராய்ச்சியுமில்லை, வாதுமில்லை; அவையின்றேல் உண்மை வெளிப்படுதலுமில்லை. இது கொண்டே அரசியல் முறையிலும் உலகியல் முறையிலும் எஞ்ஞான்றும் பிரிவு காணப்படுகின்றது.

ஒரு பிரிவினர் முன்னேக்கம், முன்னேற்றமாகிய இவற்றையே எண்ணி, சீர்திருத்தம், பழையனகழிதல் எனுமிவற்றிற் கருத்தை நாட்டுகின்ருர்கள். வேருெரு பிரிவினர் திருத்தங்களாலும் மாறுதல்களாலும் பிறக்குங் கஷ்டங்களேயும் கவலேகளேயுங் கவனித்துத் தொன்றுதொட்டு வருவனவற்றையே நிலேநாட்ட முயல்கின்றனர். ஒருவன் எத்துணே வல்லவனுயினும் அவன் முன்னேருடைய கல்வியனுபவ மாதியவற்றை விலக்கித் தானே ஒன்றை நூதனமாகப் படைத்துக் கொள்ளுதல் கூடாத காரியம். பழையவற்றி னுதவியைக்கொண்டே புதியவை இயற்றப்பட வேண்டும். இஃதிவ்வாருக, முன்னேர் தேடிவைத்த அரும்பொருட் பெருங்குவையை ஒரு மகன் வருந்தி யுழைத்து வளர்க்காது, வாளாவிருந்துண்பனுயின், அப்பொருள் குன்றலேயதாயினுங் குன்றிவிடும். இது செல்வத்திற்கேயன்றி கல்விக்கும் பொருந்துமாகையால், முற்காலத்துப் பெரியோர் நின்ற நிலேயில் நாமும் நிற்போமெனத் துணிதல் பயன் தராது. இதனுல், சீர்திருத்தத்தை நாடுவோர் பழையவற்றை யறவே யொழித்தலும், பண்டையவற்றையே போற்றுவார் புதியவற்றை முற்றும் கழித்தலும் முடியாதென்பது பெறப்பட்டது. சில நூற்ருண்டுகட்கு முன் நாகரிகமடைந்த தேசத்தோர், தங்கள் எண்ணங்களேயும் துரைத்தன முறைகளேயும் நடையுடைகளேயும் எளிதில் திருத்தியமைத்துக் கொள்ள வல்லவராயிருக்கின்றனர், அதனு லவர்களடையும் நன்மை பலவாயினும், அதிற்குறை யொன்று மில்லேயென்று சொல்ல வியலாது. திருத்தங்களுக்கும் ஒரு வரம்புண்டென்பதை மறத்தல் பெரும் பிழையாகும். ஆனல் அவ்வரம்புங் காலத்திற் கேற்றபடி திருத்தப் படவேண்டும். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகச் சிறப்புஞ் சீலமும் பெற்றிலங்கும் நாட்டினர், பிறர் போல் தமது பழக்கங்களேக் கைவிட முடியாமலிருப்பது இயற்கையே யாயினும் மாறுதல்களேக் கைக்கொளாவிடின் மாளுதல் திண்ணமாகையால், புதியவற்றில் தமக்குப் பொருத்தமானதை யவர் விரைந்து தழுவவேண்டும். அங்ஙனஞ் செய்தற்கு முற்காலத்தையுந் தற்காலத்தையும் பற்றிய உண்மையான அறிவு அவசியம்.

"இக்கரை மாட்டிற்கு அக்கரை பச்சை" என்பது நமது தமிழ் மக்கள் வழங்கும் ஒரு முதுமொழி. "தூரத்தி விருப்பவை பார்வைக்கு அழகாகத் தோன்றும்" எனுங் கருத்தமைந்த ஒரு ஆங்கிலப் பழமொழியும் வழக்கத்தி லுண்டு. இப் பழமொழியும் ஆன்றோர் அனுபவித்துரைத்த அருமொழி யென்று அனைவரும் ஒப்புக்கோடற் குரியதொன் றேயாம். இதுபற்றி நோக்குமிடத்து, அண்மையது அரிதே னும் எளிதாகத் தோன்றலும், சேய்மையது எளிதேனும் அரி தாகத் தோன்றலும் உலகை இயற்கை என்பது புலனும். "நாட் டிற்கு அதிகாரியேனும் வீட்டிற்கு மகன்தான்" என்ற பொரு ளுடைய ஆந்திரப் பழமொழியும் ஒன்றுண்டு. இவ்வாறு நிகழுந் தோற்றங்களை யறிவுடையோர் உண்மையெனக் கொள்ளார். தோற்றங்களை உண்மை யென்று கொண்டால் மின்னுவதெல்லாம் பொன்னென்று கொள்ளலும் வேண்டும். ஆகலின் தூரத்தினு னுஞ் சமீபத்தினுலும் பிறக்கும் பொய்க் காட்சியை யகற்றினு லன்றி உண்மை விளங்குவதில்லை. உதயகாலத்திற் கீழ்த்திசை யிற் சிவந்து திரண்டு தோன்றிய கதிர்ச் செல்வனைத் தீங்கனி யென்று கருதி நுகர்தற் கவாவி, விண்மிசைப் பாய்ந்து வெப்பத் தாற் ருக்குண்டு விழுந்த அனுமன்செய்தி, தோற்றத்தால் மயக்க முறுவோர்க்கு ஓர் எச்சரிக்கையாகும். பார்வைக் கினிதாய்த் திகழும் நீல நிறமுடைய ஆகாயவெளியும் பேய்த்தேர் போன்ற தொரு தோற்றமேயன்றி உண்மை யன்றென்பதை அறியாதார் யாவர்? கணித்தற்கும் மனத்தினுற் கிரகித்தற்குங்கூடாத பெருந் தூரத்தில் ஆகாயத்தில் நீல நிறமுண்டாகிற தென்று நூலோர் கூறுகின்றனர். இவ்வாறே மிகத்தூரமான புராதன காலமுந் தோற்றமாத்திரையான் நோக்குவார்க்குப் பலவகை இனிய காட் சிகளமைந்த அற்புதமாய் விளங்கவுங் கூடும். அஃது உண்மை யென்பார் கூற்று, பயனிலதாய் ஒழியுமே யன்றி, மெய்யுணர்தற் குச் சாதனமாகா தென்க. மேற் சொன்னவற்ருல், இடத்தி லேற்படுஞ் சேய்மையால் நிகழும் பொய்த்தோற்றம், காலத்தி லேற்படுஞ் சேய்மையாலு முண்டாகு மென்பது காட்டப் பட்டது.

சின்னாண் முன்னர் மாண்டொழிந்த உறவினரோ அன்றி நண்பரோ எவரையேனும் பற்றி நாம் பேச நேருங்கால், அவரிடத்துள்ள நற்குண நற்செயல்களையே நாம் பெரிதும் விரித்துரைப்பதும் ஏனைய தீக்குண மாதியவற்றை மறைப்பதுமே நம்மவருட் பெரும்பாலும் வழக்கமாகக் காண்கிறோம். பகைவரும் அவரைக் குறித்து நிந்தைகூற அஞ்சுகின்றனர். அவரை நிந்திப்போரைக் காணினும் அவர்மாட்டு நமக்கு வெறுப்புண்டாகிறது. அன்றியும் நாம் அம்மொழிகட்குஞ் செவிகொடா தொழிகின்றோம். இயன்றவாறு அம்மொழி வெளிவரா தடக்கவும் முயல்கின்றோம். ஆகவே இறந்தவர் எத்தகையராயினும் அவர்பால் நாம் நல்லெண்ண முடையவராயிருக்க விரும்புகிறோமென்பது வெளியாகிறது. இது பெரிதும் போற்றுதற் குரித்தேயன்றி கடிதற் பாற்றன்று. ஆனால் இதனைக் கொண்டு இறந்தாரனைவரும் குற்றமின்றி நற்குணமுடையராகவே வாழ்ந்தனரெனத் துணிதல் கூடுமோ? அவரும் நம்மைப்போல் இவ்வுலக வாழ்வில் ஈடுபட்டுத் துயரிழைத்துத் துன்பமுற்றும், நன்மை செய்து இன்பமுற்றும் பலவகையாக நாட்கழித்தனராகவே வேண்டும். எனினுங் காலச் செலவாலும் நமது மானிட இயற்கையின் தன்மையாலும் அவரைப்பற்றிய அபிப்பிராயம் வேறுபடுகிறது. சிறிது காலஞ் செல்வதற்குள் இத்தகைய மாறுதல்கள் நிகழக் காணும் நாம் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் நடந்தவற்றை ஆராய்ச்சியின்றி நோக்குவதால் எவ்வளவு அறியக்கூடும்? ஊன்றிப்பார்க்குந் திறமையுடைய ஒரு சிலரே உண்மையுணரும் ஆற்றலுடையவராவார். பண்டை நாளில் நிகழ்ந்தவற்றைக் குறித்துப் பேசும் நூல்கள் பல பிற்காலத்தவரால் எழுதப்பட்டமையின், அவற்றிற் குற்றங் குறைந்து குணம் மிகுந்திருக்கு மென்பது எளிதிலறியப்படும்.

(தொடரும்)

க. ப. சந்தோஷம், B. A., L. T.

---

# இலக்கணவிளக்க வுரைச்சமாதானம்

தமிழகத்து மறைந்துள்ள பொருள்களையெல்லாம் வெளிப் படையிற் காணவேண்டும் என்னும் விருப்பால் நூலாராய்ச்சி செய்துவரும் ஸ்ரீமான் வேங்கடசாமி நாட்டாரவர்கள் 'இலக் கண விளக்க வுரையாசிரியர் யார்?' என வாராய்ச்சி செய்து அவ்வுரை நூலாசிரியரதன் றெனவும், சதாசிவநாவல ரியற்றிய தெனவும், வரைந்துள்ளதும்; அதற்கு வேறொரு நண்பர் ஸ்ரீ மான் சிதம்பரராமலிங்க பிள்ளையவர்கள் 'நூலாசிரியரே உரை யாசிரியர்' என மறுப்பெழுதியதும்; செல்வி நேயர் யாவரும் அறிந்ததே. இவ்விருவர் கோள்களையு மாதாரமாகக்கொண்டும், வேறு சில ஆதாரங்கள் கொண்டுஞ் சமாதானங் கூறுதும்.

ஒரு சிறு விஷயத்தைப் பல முறையும் வரைந்து செல்வியை விணக்கெடுப்பது செல்வியாசிரியர்க்கும் செல்வி நேயர்களுக்கும் வெறுப்பையு மலுப்பையுங் கொடுக்குமென் றஞ்சிக் கூடியவரை சுருக்கி ஒரு பாலிலேயே எழுத நேர்ந்தேம்.

மறுப்புரையாசிரியர் பிள்ளையவர்கள் (க) சிவஞான முனி வர் தெரியாமலோ சூருவளி செய்தார்; (உ) சுவாமிநாத தேசி கர் அறியாமலோ உரைச்சூத்திரஞ் செய்தார்; என்ற அவர்கள் மேற்கொண்ட நம்பிக்கையாகிய விருவேதுக்களும் (௩) தர்வி புலாக நியாயமாகிய வொருவேதுவுமாக மூன்றேதுக்கள் கொண்டே மறுப்பெழுதத் துணிந்தார். இவற்றுட் சிவஞான முனிவரிடத்துக்கொண்ட நம்பிக்கையாகிய வேதுவிலேயே மற் றைய வேதுக்களினும் கூடியபங்கு துணிவுகொண்டு வரையத் தொடங்கியுள்ளார் என்பது அம்மறுப்புரையை வாசித்தறிந்த செல்வி நேயர்களுக்குத் தெள்ளிதின் விளங்கும். ஆயினும் பின் வருவனவற்றால் அவ்வளவைக் காட்டுவாம்.

"(இனி) மாதவச் சிவஞான சுவாமிகளோ" என முனிவர் தேசிகர் ஆகிய விருவரினின்றும் பிரித்தெடுத்த பிரிநிலையும்; முனித்தன்மை கல்வி முதலியவற்றிற் சிறந்தவரென்னுஞ் சிறப்பு

மாகிய விருபொருளுந்தொக்க ஓ வென்றெடுத்த வாக்கியங்களி லுள்ள " எவ்வளவு நுணுகியிருப்பார் " என்று கூறுவதாலும்; "போலுமென்று ஐயுறவு தோன்றக் கூறுகின்றார் என்பதும் மறுப்பெழுதிய சிவஞான சுவாமிகள் பார்வைக்குப் புலப்படாம விருந்தனவென் றெண்ணிக்கொள்வது " என்பதாலும் அவ்வளவு விளங்கக் கிடக்கின்றதன்றோ ?

ஆகையால் அவருடைய மூன்றாவது ஏதுவாகிய தாலி புலாக நியாயத்தை யாராய்ந்துகொண்டு பின்னர் மற்றைய வேதுக்கட்குங் கூறுவாம்.

பிள்ளையவர்கள் தொல்காப்பியத்தில் ஏதோ நாலு மூன்று சூத்திரங்களையும் அதே மாதிரி இலக்கணவிளக்கச் சூத்திரங்களை யும்; இன்னும் நாலுமூன்று பண்டையுரைகளையு மெடுத்துக்காட் டித் தமது தாலிபுலாகத்தை நிறுத்துகின்றார். மிகுதிச் (நூலா சிரியர் தாமாக வியற்றிய ) சூத்திரங்களும்; உரை (உரையாசிரி யர் தாமாகக் கூறியவுரை)களும்; என்ன புலாகமோ? எல்லாந் தாலிபுலாகமென்றாலும் இவர்தானா இப்புலாக நியாயங்கொண்டு நூலும் உரையு மியற்றியுள்ளார் ? வேறு மாசிரியர்கள் இவ்வாறு நூலாவது உரையாவது நூலு முரையுமாவது செய்திருக்கிறார் களா ? அவர்களை யேனோ இங்கு காட்டவில்லை. மேலும் வேறு மோரிடத்தில் உரையாசிரியர் "இங்ஙனம் வரவே கருவி கருத்தா வென வேறு கூறவேண்டாவெனினும் அது மிகுந்து காட்ட லின் வேறு கூறினார்போலும் (இ. வி. ௨௭௫-ம் பக்.) எனப் பின் னும் ஐயுறவுதோன்றக் கூறினார்; கூறித் " தொல்காப்பியனாரும் உடனிகழ்ச்சி கூறினார்" என முன்னர்க் கூறப்பட்டதுங் கூறினார். இவ்வாறு முன்னர்த் தொல்காப்பியனார் கூறியதறிந்த பின்னும் ஒரு நூல் செய்யுமாசிரியர் ஐயுறவு தோன்றக் கூறி னால் அந்நூலை யெற்றுக்கோ அவர் செய்வதும் நாங்கள் படிப் பதும்.

எவ்வாறாயினும் ஆக. நாட்டாரவர்கள் "என்றார்" "கூறி னார் " என்று படர்க்கையாற் கூறப்பட்டிருக்கிறதென்று கூறி

யிருக்க, பிள்ளையவர்கள் அதை விளங்காது "என்றார்" முத லிய படர்க்கைப்பாடில்லாத வேறுரையாசிரியருரைகளையெடுத்து ஒப்புமைகாட்டியிருக்கின்றார். அவ்வாறு ஒருவருரையைப் பின் ஞெருவர் எடுத்தாளுவது வழக்கந்தான்; அவைக் கிப்போது வழக்கில்லை. நூலிற் கிடந்துள்ள விதப்பு மொழிகளினாலும், இலேசு உத்தி முதலியவைகளினாலும் பெறப்படும் இலக்கணங் களை யெடுத்துக் கூறுமிடத்து நூலாசிரியர்மேல் வந்த படர்க் கைக் கூற்றுகளையே நாட்டாரவர்கள் கூறியது. ஆகையால் நாட்டாரவர்கள் கூறியதைப் பிள்ளையவர்கள் விளங்காது கூறி ஞர்களென விளங்குகின்றது.

இவைகளும் ஒரு புறமிருக்கப் பிரயோக விவேக நூலார் இலக்கணக்கொத்து நூலார் முதலியோர் தன்னைப் பிறன்போற் கூறும் பாயிரங் கூறியுள்ளார். அவர்கள் ஏனோ அவ்வாறு உரை யையுந் தன்னைப் பிறன்போல் வைத்துத் தாலிபுலாகமுங் கூட்டி யுரை செய்யவில்லை.

உ௩. சிவஞான முனிவர்மேல் நம்பிக்கையாகிய வேதுவை யாராய்வாம். பிள்ளையவர்கள் சுவாமி முனிவர் அவர்களில் ஏற் றிய பாரங்களாவன: "எவ்வளவு நுணுகியிருப்பார்" "பார் வைக்குப் புலப்படாம லிருந்தனவா" என்பவைகளாம். இவற் றால் முனிவர் மிகுந்த கல்வித் திறமையும் நூலாராய்ச்சியு முள் ளவர் என்றும் வெளிப்படுத்துகின்றார். முனிவர் கருத்தும் பண்டைச் சங்கப்புலவர் கருத்தும் வேறு படுங்கால் யாது கொள்ளத்தக்கது?

"எற்பாடு; நெய்தலாதன் மெய்பெறத்தோன்றும்" என்ற சூத்திரத்து "எற்பாடு" என்றது நாள் வெயிற்காலை யென்றார். இதைப்பற்றி நண்பர்கள் பெரியோர்கள் யாவருமறிந்திருப்பினும் இங்கு வேண்டி யிருப்பதாற் சில கூறுவாம். எற்பாடு காலை யென்னின்,

"கானன் மலர்ந்த கழிப்பூக் கூம்ப
நீனிறப் பெருங்கடல் பாடெழுந் தொலிப்ப

மீனார் குருகின் மென்பறைத் தொழுதி
குவையிரும் புன்னைக் குடம்பை சேர
வசைவண் டார்க்கு மல்குறு காலை'' (அக-௬௰)

எனவும்,

"கதிர்பகா ஞாயிறே கல்சேர்தி யாயி
னவரை நினைத்து நிறுத்தென்கை நீட்டித்
தருகுவை யாயின்...........
மையில் சுடரே மலைசேர்தி யாயிற்
பௌவநீர் தோன்றிப் பகல்செய்யு மாத்திரை
கைவிளக் காகக் கதிர்சில தாராய்''......(கலி. நெய்-௨௫)

எனவும் வரும் பாக்களை நெய்தலிற் கோத்த புலவோனிலும் மிகுந்த பெலவானோ இவர்.

"காலை யாவ தறியார்
மாலை யென்மனார் மயங்கியோரே'' (கலி. நெய்-௨)

என்னும் நெய்தற் பாட்டிலுள்ள இவ்வீரடியையும் யாரோ சொல்லக் கேட்டுவிட்டார்போலும். ஆகிலும் அப்புலவோன் இவரிலுந் தாழ்ந்தவனாக வைத்துக்கொள்வோம்.

"கனலி பாடொடு பகல்செலக்
கல்லாது முதிர்ந்தவன் கண்ணில்லா நெஞ்சம்போல்''
(கலி. நெய்-௧௯)

என்பதிற் "கனலிபாடொடு பகல்செல'' என்றதற்கு இவர் என்ன பொருள் கண்டாரோ? இவற்றை விட் டிம்முனிவர் சொல்வதையே கொள்ளின் சங்க நூல்களையெல்லாஞ் சுட்டெறியச் சொல்கிறீர்களா**தமிழ்த்தாய்க்கு உயிரோடு சந்தனக் கொள்ளி வைக்கச் சொல்கிறீர்களா*** என்ன பரிதாபம்.

இவற்றாற் பிள்ளையவர்கள் முனிவர் மிகுந்த நுண்ணறிவும் நூலாராய்ச்சியும் உடையவர் என்று சொல்லியதும், அதனால் அவரிடத்தில் மிகு நம்பிக்கைகொண்டு மறுப்பெழுதத் துணிந்ததும் வீணே.

இனி, சுவாமிநாத தேசிகர் "என்கண் காண" என்றதைப்பற்றிக் கூறுவாம். நம் பண்டைச் சரித்திரங்களும் நூல்களும்; முந்தியது பிந்தியதாகவும், பிந்தியது முந்தியதாகவும் ஒன்று மற்றொன்றாகவும், ஒரு பாடம் பல பேதமாகவும் கிடப்பனவேயன்றி; ஒரு நூலிடையுள் இன்னொருவர் சில பாடிச் சேர்ப்பதாகவும், குறைப்பதாகவும், திரிப்பதாகவுங் கிடப்பன சரித்திர வாராய்ச்சி நூலாராய்ச்சி வல்லார் யாவருஞ் செவ்வனே யறிவர். அவையுங் கிடக்க:

வைத்தியநாத நாவலர் நூல்செய்த காலத்து அவர் தம்மிடம் படிக்கும் மாணவர்களுக்கு அந்நூலுக்குத் தாமாகவே பொருள் விரித்துரைத்துப் படிப்பித்திருக்கலாம், அதைச் சுவாமிநாத தேசிகர் நேரிற் கண்டு கூறியிருக்கலாம். பின்னர்ச் சதாசிவ நாவலர் இவ்வாறோர் விரிவுரை யெழுதிப் பிரசுரப்படுத்தியிருக்கலாம்.

இவ்வாறன்றேல் பிரயோக விவேக நூலார் "யாம் வடநூலேயே தற்பவமாகச் செய்தலின்" என்று வடநூலேயே காரணஞ் சாட்டிப்போகத் தமிழுக்கு முதன்முதல் நூலும் உரையும் இயற்றப் புகுந்த வைத்தியநாத நாவலர் ஏனோ யாதுங் கூறாது செய்தார். இவர் யாதொரு சாட்டுங் கூறாமலிருக்க இவருக்குப் பிந்தி நூல் செய்தவராகிய சுவாமிநாத தேசிகர் ஏனோ காரணங் கூறப்புகுந்தார். காரணங் கூறாதது பிழையென்னில், காரணங் கூறாத பிழைபாடாகிய நூலுரையைத் தேசிகர் ஏனோ தம் முரைக் கிலக்கண மாக்கியுள்ளார்.

இனி "யாவருந் தெரியப்**பகருக வென்னு" என்றதற்கிணங்க "மாணாக்கர்க்குப் பொருள் விரித்தறிவு வுறுத்தினன்" என்று நாட்டாரவர்கள் கூறுவது பொருந்தாது என்றனர். "கேட்போர்" என்பதற்கு மாணாக்கர் கேட்போர் என்று முனிவர் கூறுவதையொத்துக்கொள்ளும் பிள்ளையவர்கள் "யாவருந் தெரிய என்றதற்கு (ச்சிற்றறிவினையுடையவருமாகிய) மாணாக்கர் யாவருந் தெரிய என்றாற்படி மிழுக்கென்னையோ ?

பிள்ளையவர்கள் நூலாசிரியரின் வேறுவார் என்று நாட்டாரவர்கள் கூறியது செப்புவழுவோ என்னவோ ஒரு வழுவென்றார். அது வழுவன்று பின்னர்க் காட்டுதும். அவ்வாறு வழுவான காலத்தும், அவர் செய்த ஆராய்ச்சியில் எழுத்துச் சொல் முதலிய பிழைகள் இருப்பதால் (அவர்) கூறுவது உண்மையாகாது என்று கூறுவது எதுபோலு மென்னின்: ஓர் இலக்கண வித்துவானிடத்திற் படிக்கும் மாணவகர்கள் ஒருநாட் காலை வித்துவானுடைய வீடெரியக்கண்டு பதறிப் புறத்திருந்த வித்துவானிடம் ஓடோடியும் போய்ப் பயத்தினால் வாய்குழம்பி வீட்டுப் பேச்சினால் "வாத்தியாரே உங்களின்னை-வீடெரிஞ்சுபோச்சுதெல்லோ" என்று கூறியபொழுது வித்துவான் அவர்களில் மிகுந்த கோபங்கொண்டு ஏடா மாணவர்களே முழுவதும் வழுவுடை மொழிகளாற் பகருகிறீர்களே என்று தடிமுறித்து அவர்களைப் பிடித்துக் கசையடி கொடுத்து இலக்கணம் படிப்பித்துவிட்டுச் சாயங்காலம் வந்ததும் வீடு சென்றாராம். இதுபோலும் பார்த்தீர்களா வசனத்திற் பிழை யிருப்பதால், வித்துவான் வீடெரியாதென்று நினைத்திருந்து விட்டார். பிள்ளையவர்களும் நெருப்பைத் தலைகீழாகப் பிடித்தாற் சுடாது குளிரும் என்று நினைத்துவிட்டார். எப்படி, சரியாயிருந்தாற்றானே தன்குணஞ் செய்யும்.

நாட்டாரவர்கள் உரையாசிரியர் யாரென்று கேட்டதேயொழியத் தொல்காப்பியத்துக்கு விருத்தியுரை யெழுதித்தரும்படி கேட்கவில்லை. நாட்டாரவர்கள் வாக்குப் பிழைத்தாலும் நோக்கம் பிழைக்கவில்லையென்று இவர் விளங்கவேண்டியது. பிள்ளையவர்கள் தம் வசனத்தில் வித்துவான்கள் எத்தனை பிழைகள் காண்பார்கள் என்பதையும் "குறுமாமுனிவர் சொற்றபாவினும்" என்றதையும் மேலதோடுசேர்த்து நினைக்க வேண்டியது. இப்படியானால் குறைவில்லாத நிறைவுள்ள அறிவிலியாகிய சிறியேன் வசனத்தில் அறுநூற்றுக்கு அதிகப்படாத பிழைக ளேற்படுமென்று பயமாகிறது. பயந்தும் (கடவுள் நீங்கலாக) எல்லாம் அறிந்தவருமில்லை ஒன்று மறியாதவருமில்லை யென்று துணிவுமாகிறது. நிற்க:

அவர் கூறியது வழுவன்றென்பது காட்டுதும். நூலு முரையும் வைத்திய நாவலரதென்று வழங்கப்படுவது அறியப் பட்டதே, அதையுங்கொண்டு "உரையு***மியற்றினர் புதல்வர் சதாசிவநாவலரென்று கூறுவாருமுளர்" என்பதையுங்கொண்டே ஆராய்ச்சிசெய்தார் என்பது செல்விநேயர் யாவருமறிவர். ஆகவே உரையாசிரியர் வைத்தியநாத நாவலரோ சதாசிவநாவலரோ வென்று ஐயமேற்பட்டது வெளிப்படை. ஆணோ பெண்ணோ வென்றையமேற்பட்டுழி ஆணல்லன் என்றாற் பெண்ணென்று துணியப்படாமல் மணிச்சத்தம் என்றுந் துணியப்படும்போலும்.

"தன்மை சுட்டலும் உரித்தென மொழிப
அன்மைக் கிளவி வேறிடத் தான"

என்பது முதலிய யாதுக்கோ? ஆகையா லிஃது இலக்கண மறியாதா ரிடத்துத் தோன்றும் வழுவென மறுக்க.

இவ்வாறு ஒருவர் பிழையை வேறொருவரும் அவர் பிழையை மற்றொருவருங் கூறிக்கொண்டு செல்வியை வீண் காலம் போக்கின் பத்திராசிரியர் வெறுப்புக்கொண்டு விஷயத் தைச் செல்வியிற் சேர்க்க மறுப்பரோ வென்று பயங்கொள்ளி னும், அவரை வேண்டிக்கொண்டு இன்னும் ஒரு சிறு வசனங் கூறக் கேட்கின்றேம்.

இக்கூறிய காரணங்களால் ஒரு பெரியவர் கூறி விட்டாரே ஆகையால் காக்கைநிறம் வெள்ளையென்று கொள்ளாமல்; நூல்களையும், உரைகளையும், பாடங்களையும், பேதங்களையும், அதிகாரங்கள் முறைகளையும், வேறுபாடுகளையும், ஆராய்ந்து உண்மைகளை நண்பர்கள் வெளிப்படுத்துவார்கள் என்று எதிர் பார்த்திருக்கின்றேம். ஆனால் இவ்வுரை வழக்குக்கு முடிவு என் னவோவென்று நண்பர்கள் கேட்கின் உரையாசிரியர் நூலாசிரிய ரன்று சதாசிவ நாவலரென்றே துணியக்கிடக்கின்றது.

அன்றெனின்; நூற்பாக்களின் விதப்புக்கிளவி இலேசு உத்தி முதலியவைகளினால் இலக்கணங்களை விரித்துரைக்கு

மிடத்து நூலாசிரியரை வியந்து கூறுதன் மரபாதலால்; அவ்வாறு வியந்து கூறுமிடத்துத் தம்மைத்தாமே வியந்து கூறுதன் மரபன்றாதலால்; அந்நூலுரையிடத்து ஏறக்குறைய நூற்றைம்பதுக்குக் குறையாத என்றார் முதலிய படர்க்கைச் சொற்களிருப்பதால்; வேறெப் பெரியநூல்களின் நீண்ட உரைகளிடத்தும் இவ்வளவ் வியப்புக் காணப்படாததால்; நூலாசிரியர் வைத்தியநாத நாவலரே உரை செய்தபோதும், தாமுரைசெய்ததென்றும் தம்மா லுரைசெய்யப்பட்டதென்றும் பின்னுள்ளோர் கூறுவது தமக்குந் தமிழ் மாதாகிய தந்தாய்க்கும் அழகல்லவென்று நினைத்தாவது படர்க்கையாற் கூறி அப்புகழாகிய சொத்தை வேறுபிள்ளைக்குங் கொடாது தம் புதல்வராகிய சதாசிவ தேசிகருக்கு முதுசொம் ஆகக் கொடுத்தாரென்று கொள்வதுந் தகுதியாகும்.

ஆகிலும் சாத்தனுடைய கைநாடியைப் பார்த்துக் கொற்றனுடைய நோய்க்கு மருந்து கொடுத்த வைத்தியன்போ லில்லாமல், வேறொருவர் சொல்வதைக்கொண்டு தீர்ப்புச் செய்யாமல் அவ்வந் நூல்களிலும் உரைகளிலும் உள்ளவற்றைக் கொண்டு தீர்ப்புச் செய்வதே புலனன்குணர்ந்தோர் கடன்மையாகும்.

ஐயா, யாம் இலக்கணவிளக்கத்தையாவது வேறிலக்கணங்களையாவது (நன்றாய்ப்) படித்தேமுமல்லேம், எள்ளளவேனும் விளங்கினேமுமல்லேம். ஆகையால் எம் சொல்லைப் பொருட்படுத்தாது, பல நூல்களையும் ஆராய்ந்தும் ஆராய்ச்சிசெய்து கொண்டும் காலங்கழிக்கும் பெரியோர்கள் இந்நூலுரையையும் நன்றாய் ஆராய்ச்சி செய்து உண்மை முடிவு செய்வார்களாக.

இலங்கை, ஆ. ஆறுமுகம் பிள்ளை

# நூலாராய்ச்சி

## V

ஒரு தாய் வயிற்றிற் பிறந்த இன்னிசை யெழுவரி லொருவர் திருவள்ளுவராம். கீழ்குடி வள்ளுவ வீட்டிலிருந்து வளர்ந்தமையால் அப்பெயர் பெற்றனர் போலும். புலமை வாய்ந்த நாயனாரை வள்ளுவனென்று இழித்துக் கூறுவான் பேதையேயென்று கூறியுளார் மாமூலனார். "மறந்தேயும் வள்ளுவனென்பானோர் பேதையவன் வாய்ச்சொற் கொள்ளா ரறிவுடையார்." இப் பெரும்புலவர் ஆக்கிய நூல் திருக்குறளாம். இந்நூலொன்றிற்கு மட்டுமே யிடங் கொடுத்தது சங்கப்பலகை யென்ற பெயர் யெங்கும் பரவிற்று. இதனைச் சங்கப் புலவர்கள் பலவாறு புகழ்ந்துளார். தமிழ்மறை யென்றனர் ஒருவர். மற்றொருவர் பொது மறை என்றழைத்தனர். வேறொருவர் பொய்யாமொழி யெனப் புகன்றனர். வாயுறைவாழ்த்தென்றனர் பின்னை யொருவர். அரசிற்கிழார் வாக்கின்படி இவர்போன்று 'சுருங்கிய சொல்லால் விரித்துப் பொருள் விளங்கச் சொல்லுதல் வல்லயார்"? இந் 'நூன் முறையை வந்திக்க சென்னி, வாய் வாழ்த்துக, நன்னெஞ்சஞ் சிந்திக்க, கேட்க செவி' என்ற உக்கிரப்பெருவழுதியார் "நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா" த் தந்தமையால் இது தமிழ்மறை என்றாயிற்று. மக்கள் வேறுபாடின்றி எப்பாலவரும் எச்சமயத்தினரும் பொதுவாக இந்நூலினைப் படித்து நூற்பயனாகிய மெய்ப்பொருளை யுணருமாற்றலை யளித்தலால் இது பொதுமறையென்று கல்லாடங் கூறும். "சமயக் கணக்கர் மதி வழி கூறாதுலகியல் கூறிப் பொருளிது வென்ற" னன் வளர்கவிப் புலவன் வள்ளுவன். பொய்யாமொழி என்றது உள்ளிருள் நீக்க வல்ல ஒளிவிளக்கெனெ விளக்குஞ் செந்நெறியைத் தருதல் பற்றியாம். " உள்ளுந்தோ றுள்ளுந்தோ றுள்ள முருக்கி " " ஓதற் கெளிதா யுணர்தற் கரிதாகிய " வள்ளுவர்வாய் மொழி இஃதாம். " தொடங்குங்காற் றுன்பமா யின்பம் பயக்கும் " என்றாற்போல உலகிலுள்ளார் துன்ப நோயை இன்பந் தினைக்க

வல்லது இம்முது மொழி நூலாதலின் இதனை வாயுறைவாழ்த் தென்றனர் இளவேட்டனார்.

இன்பமுந் துன்பமு மென்னு மிவையிரண்டு
மன்பதைக் கெல்லா மனமகிழ—வன்பொழியா
துள்ளியுணர வுரைத்தாரே யோதுசீர்
வள்ளுவர் வாயுறை வாழ்த்து.

வாயுறை என்பது சொன்மருந்தாதலின் பிறவிப்பிணிக்கு மருந் தாகும் இவ்வாழ்த்து.

"வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்புங் கடுவும் போல வெஞ்சொற்
றாங்குதலின்றி வழிநனி பயக்குமென்
றோம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே"

இவ்வாறு மக்களுள்ளுவன பலவற்றையுந் தந்து அகவிருளைப் போக்கிச் செம்பொருளை விளக்கத் தாயின் கருணையை யீத்தளிக் கும் மாதாநுபங்கியின் புகழ் எந்நாட்டிலும் எந்நாளு நிகழுமென் பதற்கு ஐயமுளதோ ?

ஒரு நூலைச்செய்யும் புலவர் தம் நூலில் தாமாக அறிந்தன வற்றையும், நூல்களிற் கண்டனவற்றையும், உலகியல் வழக்கில் தெரிந்தனவற்றையும் தொகுத்தும் வகுத்தும் விரித்துந் தருத லியல்பு. நாயனாரும் இம்மூவகையிலும் பொருள் கூறியிருக்கின் றனரென்பது பின்வருங் குறள்களாற் றெளிவுறும். மக்கட் பேறு, வாய்மை, கயமை என்னு மதிகாரங்களில் தாங் கண்ட தைக் கூறியுளார்.

1. பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற. (அதி. எ)
2. யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற. (அதி. ௩௰)
3. மக்களே போல்வர் கயவரவ ரன்ன
வொப்பா ரியாங்கண்ட தில். (அதி. ௱அ)

தாங்கற்ற நூல்களிற் கண்ட வுண்மைகளைக் குறளில் தந் துள பலவற்றிற் சில இவை:

1. ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு. (அதி. ௩)

2. பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை. (௩௩)

3. பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்
தெப்பா னூலோர்க்குந் துணிவு. (௫௪)

4. ஊறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டி
னாறென்ப ராய்ந்தவர் கோள். (௬௭)

5. உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி
னமைவா ணென்றுரைக்கு நூல். (௭௫)

6. மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று. (௯௫)

7. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்கந் தரும். (௧௯)

8. பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்ப ருணீங்கி
யல்லவை செய்தொழுகு வார். (௨௫)

9. இகலென்ப எல்லா வுயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கு நோய். (௮௬)

10. அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல். (௨௧)

11. அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை. (௮)

12. பெண்ணினாற் பெண்மையுடைத் தென்ப கண்ணினாற்
காமநோய் சொல்லி யிரவு. (௱௨௮)

உலகவழக்கிற் கேட்டதை உலகின் மேலேற்றிக்கூறுதலுமுண்டு.

"பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதியென்னு முலகு. (௱௨)

உலக மென்பது உயர்ந்தோர்மாட்டேயாயின் அதுவுந் திருக்குறளிற் காணப்படும்.

1 மழித்தலு நீட்டலு வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின். (உ௮)

2 உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார். (௰௪)

குறளாசிரியர் முப்பாலில் நாற்பாலையு மளித்துளா ரென்பதை,

"அறம்பொரு ளின்பம் வீடென்னும் நான்கின்
திறந்தெரிந்து செப்பிய தேவு"

என்று மாமூலனாரும்,

"அறனறிந்தே மான்றபொரு ளறிந்தே மின்பின்
திறனறிந்தேம் வீடுதெளிந்தேம்"

என்று மாணி பூதனாரும் கூறியிருத்தலிற் காண்க. ஆயிரத்து முன்னூற்று முப்ப தருங்குறளில் "ஏழுகடலை'ப் புகட்டிக் குறுகத் தறித்திருக்கின்றமையினை இடைக்காடர், ஔவை வாக்கா லறியலாகும்.

கடவுளொன்றுண்டு. அது முழுமுதல், ஆதி. அது வானுலகம் மண்ணுலகம் நரகமென்பனவற்றைப் பகுத்துத் தன்னினின்றும் பிரித்துத் தந்தமையை விளக்குங் குறள்களாவன:

1 அகரமுதலவெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. (க)

2 இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற் றியான். (௱எ)

3 வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது. (௩௮)

தெய்வமென்ற பொதுப்பெயர் பலகுறள்களில் காணப்படும்.

1 தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை. (௬)

2 தெய்வத்தா னாகாதெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். (௬உ)

3 ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல். (எக)

4 குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ
மடிதற்றுத் தான்முந் துறும். (௱௩)

திருமாலைக் குறிப்பிடுங் குறள் இவையாம்:

1 மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு. (௬௧)

2 தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல்
தாமரைக் கண்ணா னுலகு. (௱௧௧)

சீதேவி, மூதேவியைக் குறிப்பன இவை:—

1 மடியுளாள் மாமுகடி யென்ப மடியிலான்
றாளுளா டாமரையி னாள். (௬௨)

2 அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில். (௯)

3 அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும். (மிஎ)

4 அகடாரா ரல்ல லுழப்பர் சூதென்று
முகடியான் மூடப்பட் டார். (௯௪)

அறமே கடவுளெனப் பாவித்துக் கூறியிருப்பதையுங் காணலாம்:

" என்பி லதனை வெயில்போலக் காயுமே
யன்பி லதனை யறம்." (அ)

தேவேந்திரன் களவுப்புணர்ச்சியினாற் பெற்ற சாபத்தைத் தருங் குறள் இதுவாம்:

ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி. (௩)

உவமை முகத்தால் பல கடவுளரைக் குறளிற் காண்பே மாயினும் சிவன் முருகனென்ற சொற்களைக் காண்டலரிது.

சிவன் முருகன் பெயர்கள் வரவில்லை யாயினும் கறைமிடற் றண்ணலை ‘பெயக் கண்டு நஞ்சுண்டமைவர், நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர்’ என்ற குறளிலும், சிவனடியாராகிய இயற்பகை நாயனார், இளையான் குடிமாறநாயனார் இவர்களின் சிவத்தொண் டின் திறனை வியந்து ‘வருவிருந்து வைகலு மோம்புவான்,’ ‘வித்துமிடல் வேண்டுங் கொல்லோ’ என்ற குறளிலும் குறிப் பிடப்பட்டிருத்தல் உணரத்தக்கது.

யமனைக் குறிப்பிடுங் குறள்களாவன:

1. கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலின்
 ஆற்றல் தலைப்பட் டவர்க்கு. (உ௭)
2. கூற்றஞ்சதைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்
 காற்றா தாரின்னா செயல். (௬௰)
3 கூற்றமோ கண்ணோ பிணையோ மடவர
 ணோக்கமிம் மூன்று முடைத்து. (௱௧)

இதுகாறும் முழுமுதற்றெய்வம், வழித்தெய்வங்களைப் பற் றிய குறள்களை யீந்தனன். இனி முழுமுதற்கடவுள் எத்தன் மைத்தவர், அவரை வணங்குவதனாலுண்டாம் பயன்யாது என் பன முதலதிகாரத்தி லருளியிருப்பதை சிறிது பகுத்துரைப்பன்.

மூவுலகிற்கும் முதல்வன் ஆதிபகவன். அவன் உருவுடைய னாதலின் அவன் தாள் அடி கூறப்பட்டிருக்கின்றது. தலையே நீ வணங்காய் என்றவாறு தலையால் அவன் தாளை வணங்குதல் முறை. அவனடியைத் தொழுவார் கற்ற (மற்ற) தனாலாய பய னடைவர்; அவனைப்புகழ்வார் வினைவிட்டகல்வார்; அவன் தாளைச் சேர்ந்தார் நிலத்தில் நீடித்து வாழ்வார்; இடும்பையிலர்; மனக்க வலை நீங்கப்பெறுவர்; பிறப்பையொழிப்பர்; வேறு ஆழிகளையுங் கடப்பர்; அவன் ஒழுக்க நெறி நிற்பார் பெருவாழ்வெய்துவர். இவ்வாறு நன்மை பல வருளுந் தெய்வத்தின் தன்மை யாது? அவன் வாலறிவன், நிமலன், விருப்புவெறுப்பற்றவன், இறை வன், பொருள், ஒப்பற்றவன், அறவாழி, அந்தணன். அவன் இவ்வெண் குணங்களு முடையவன். இவன் கருணையினால்

வானம் வறக்காது, அமிர்த மழை பொழியும், புல்லுண்டாம் உழவு நிகழும், கடல்வற்றுநிற்கும், வானோர்க்குச் சிறப்பு, பூசனை, மண்ணுளோர் செய்யும் தானம் தவம், நல்லொழுக்கம் அனைத்தும் வளரும். பசிப்பிணி வாராது. உணவையாக்கித் தருவதுடன் உணவுமாகி நின்றபடியால் மழை மக்கள் செழிப்பிற்குக் காரணமாயிருக்கின்றது. மழை மிகினுங் குறையினும் கெடுநோய் செய்யுமென்பது கண்கூடாகக் கண்டவுண்மை. அவனருளாலே அவன்றாள் வணங்கி அகப்பற்று புறப்பற்றுக்களைக் களைவோரே நீத்தார், துறவி, பெரியர், அந்தணர், மறையோதுவோர், அறவோர், குணமென்னுங்குன்றேறி நின்றார், உலகத்தாரிடஞ் செந்தண்மை பூண்டொழுகுபவர் என்று பலவாறு புகழப்படுகின்றனர். இவர் பெருமைவெள்ளம் அளக்கற்பாற்றன்று.

(தொடரும்)

மு. சி. பூர்ணலிங்கம் பிள்ளை, பி. ஏ. எல். டி

---

# இன்ப நிலை

எல்லாப் பொருள்களையும் பொருண் முதல்களையும் நிலையற்ற வகைகளாகவோ வடிவங்களாகவோ கருதுதல் இந்நாளைய எண்ணத்தின் போக்காக மேலுமேலும் ஆய்விட்டது. வெளியே நடைபெறுகிற நம் உடல்வாழ்க்கையைப் பற்றி முதற்கண் ஆராய்வோம். அதன் சிறந்த இடைவெளி ஒன்றில் அதை நோக்குங்கள்: எடுத்துக்காட்டாக கோடைகால வெப்பத்தில் ஓர் ஊற்றுப் பெருக்கில் முழுகி, அதினின்று இன்பமாக வெளியேவரும் அந்த நொடிப்பொழுதை எடுத்துக் கொள்வோம். அந்த நொடியின் முழு உடல்வாழ்க்கையும்—அறிவு-நூல் இட்டபெயர்கள் கொண்ட—இயற்கைப் பொருண் முதல்களின் ஓர் சேர்க்கையே அன்றி, வேறென்ன? ஆனால் இந்தப் பொருண்முதல்கள்—அதாவது, எரிபொருளும் சுண்ணமும் நுண்ணிய நரம்பிழைகளும் ஆகிய இவை—மக்கள் யாக்கை

யில் மட்டுமே காண்பன அல்ல: அதற்கு மிகச் சேய்மையான இடங்களிலும் அவற்றை நாம் காண்கிறோம். நம் உடல் வாழ்க்கை—அதாவது, செந்நீரின் ஓட்டம், கண்ணின் ஒளிவட்டங்களினது அழிவு-மீட்சி, ஒளி ஓசைகளின் அலையால் மூளையின் வேர்நரம்புகள் மாறுபாடெய்தல் ஆகிய இவை போன்றவற்றால் ஆய நம் உடல்வாழ்க்கை—அம்முதற் பொருள்களின் நிலைபெற்ற ஓர் இயக்கமே ஆகும்: மேற் குறித்த இவ் இயக்கங்களையே அறிவு-நூல் இன்னும் மிக்க ஒருமைப் பாடுற்றவையும் இன்னும் மிகச் சிக்கலற்றவையும் ஆன உரங்களாகச் சிறுகுவித்துக் காட்டும் என்ப துணர்க எப் பொருண் முதல்களைக் கொண்டு நாம் வடிவுபட்டிருக்கிறோமோ அவற்றைப் போன்று, இந்த உரங்களின் தொழிலும் நம்மைத் தாண்டிப் பரவுகிறது. அஃது இரும்பைத் திருவாக்குகிறது, நெல்லை விளைவிக்கிறது. நமக்கு எப்பக்கத்திலும் நெடுந்தூரம் அந்தப் பொருண்முதல்கள் விதைக்கப்பட்டுப் பலப் பல ஓட்டங்களாகத் தூரத்தப்படுகின்றன ; பிறப்பும், நடமாட்டமும், இறப்பும், பிணக் குழியினின்று செவ்வந்தி பூளைத் தெழுவதும் அப்பொருண் முதல்களின் பல்லாயிரம் விளைந்த சேர்க்கைகளில் சிலவேயாக இருக்கின்றன. முகம், கை, கால்கள் ஆகிய இவற்றின் தெளிவானதும் பிறப்பு முதல் இறப்பு வரையில் உள்ளதும் ஆன அந்தப் பெரும்படியான உருவப் பாகுபாடு, நாம் அவ் ஆயிரக்கணக்கான சேர்க்கைகளை எதன்கீழ் தொடர்ந்து தொகுத்துப் பார்க்கிறோமோ அந்த நம் அகத்தோற்றமே ஆம்: என்னை ? தனக்குப் புறத்தே எப்பக்கமும் வெளியே செல்கின்ற இழைகளால் ஆய ஓர் ஆடையின்கண் உத்தியால் அறியக்கிடக்கும் ஓர் பொருட் போலியே போலும் என்றறிக. தங்கள் வழிகளினிடையில் அண்மையிலாவது சேய்மையிலாவது பிரிந்து போகப்போகிற உரங்களின்—நொடிக்கு நொடி மீட்கப்பட்ட—சேர்ந்த இயக்கமே நம் உடல் வாழ்க்கை: எனவே, இவ்வளவிற்கு மட்டுமாவது நம் உடல் வாழ்க்கை அனற்கொழுந்தின் ஒப்புமையாகும் ஓர் நீர்மையைக் கொண்டிருக்கிறது.

அல்லதூஉம், நினைப்பாலும் உணர்ச்சியாலும் ஆய அக உலகத்தைப்பற்றி ஆராயத் தொடங்கினால், அங்கே, நீர்ச் சுழி இன்னும் மிக்க விரைவாகவும், அனற்கொழுந்து இன்னும் மிக்க விருப்பங் கொண்டும் வேட்கையுற்றும் இருக்கிறது. பார்வைக்கு அசைவற்றிருந்தும் உண்மையில் நீர் கீழ்ச் சென்று ஓடுகின்ற கடற்கரையின் இயக்கங்கள் போன்று கண் படிப்படியாய் இருண்டுபோதலும், சுவரிலிருந்து கொஞ்சங் கொஞ்சமாய் நிறம் மங்குதலும் ஆக—அஃது ஆங்கில்லை. மற்று, நட்டாற்றின் பேரோட்டம் போன்றும், காட்சி, பேருணர்ச்சி, எண்ணம் ஆகிய இவற்றின்—நொடிப்போதில் தோன்றி மறையும்—செயல்களின் கொழித்தல் ஆகவும் அன்றே இருக்கிறது அது. மேலோட்டமாகப் பார்க்கும்போது, அநுபவம், ஓராயிரம் விதமான செய்கைகளை நாம் மேற்கொள்ளும் முகத்தான் நம்மினின்றும் நம்மை வெளிப்படுத்துவதும் கூர்மையானதும், இடையீடற்றதும் ஆகிய ஓர் உண்மையால் நம்மை நசுக்குவதும் ஆன—வெளிப்பொருள்களால் ஆய—ஓர் வெள்ளத்தில் நம்மைப் புதைப்பதுபோல் இருக்கிறது. ஆனால், அறிவு அவ் வெளிப் பொருள்களைப் பற்றி ஆராயும்போது அதன் வல்லமையினால் அவை சிதறிப் போகின்றன; செப்படி வித்தையின் ஒரு சூழ்ச்சியைப்போல் பொருளுக்கு ஒருமை தரும் உரம் அப்போது ஒழிந்துவிட்டது போல் தோன்றுகிறது; ஒவ்வொரு பொருளும் நோக்குபவன் உள்ளத்தில் நிறம், மணம், பொருத்தப் பாகுபாடு என்கிற அகப்பதிவுகளின் ஓர் கூட்டமாகத் தளர்கிறது. பேச்சினின்று பெற்ற உறுதியையுடைய பொருள்களால் ஆய பிரபஞ்சத்தை விட்டு, நிலையற்றவையும் அசைவுள்ளவையும் பொருத்தமற்றவையும் எரிகிறவையும் விழிப்போடே அழிந்து போகிறவையும் ஆன அகப்பதிவுகளால் ஆய பிரபஞ்சத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்து கொண்டே போவோம் ஆகில், அது இன்னும் சுருக்கமாய்ப் போகிறது: காட்சியின் முழுப்பரப்பும் தனித்த ஓர் உளத்தின் ஒடுக்கமான அறையின் அளவாகச் சுருங்குகிறது. உண்மை பொருந்திய எவ்வகைக் குரலும் நம்மாட்டு வெளியி

னின்று எதைத் துளைத்துக்கொண்டு வந்ததில்லையோ, அல்லது, வெளியே இருக்கிறது என்று மட்டும் நாம் யூகித்தறியும் எதனிடமாவது நம்மினின்று எதை ஊடுருவிக் கொண்டு போன தில்லையோ ஆன்மாவின் அந்த மொத்தச் சுவரால் ஒவ்வொருவனிடத்தும்—அகப்பதிவுகளின் ஓர் கூட்டம் என்று முன்னமேயே சிறுகுவிக்கப்பட்ட—அநுபவம் சூழப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு உள்ளமும் தன் சொந்தமான பிரபஞ்சக் கனவை ஓர் தனித்த கைதியாக வைத்துக்கொண்டிருக்குங்கால், அந்த அகப்பதிவுகளில் ஒவ்வொன்றும் ஒவ்வொருவனது தனித்த நிலைமையில் உண்டான ஓர் அகப்பதிவே ஆகும். பிறித்தறியும்-முறை இன்னும் ஒரு அடி மேலே போய் நம்மில் ஒவ்வொருவனுக்கும் அநுபவம் எவற்றின் அளவாகக் குறுகுகிறதோ, ஓர் தனித்த மனத்தின் அவ் அகப்பதிவுகள் எப்போதும் ஓடிக்கொண்டே யிருக்கின்றன என்றும்; அவற்றில் ஒவ்வொன்றும் காலத்தால் வரையறுக்கப்பட் டிருக்கிறது என்றும்; காலம் எண்ணிறந்த அளவு கூறுபடுத்தப் படும் ஆகையால், அவற்றில் ஒவ்வொன்றும் அங்ஙனமே எண்ணிறந்த அளவு கூறுபடுத்தப்படும் என்றும்; நாம் அதை அறிய முயல்கிற போதே மறைந்ததும், 'அது இருக்கிறது என்பதைக் காட்டிலும் அது இருந்தது என்பதே அதைப் பற்றி மிக்க உண்மையோடு சொல்லப்படுவது' என்கிறதும் ஆன ஒரே ஒரு நொடியே அவ்வகப்பதிவில் உள்ளதெல்லாம் என்றும் நமக்கு உறுதியாக உரைக்கிறது. நம் உயிரில் உண்மை என்று கருதக்கூடியது, நீரோட்டத்தில் தன்னை உடனுக்குடன் சரிப்படுத்திக்கொண் டிருக்கும் நடுங்கும் நுண்ணிய புல்லிதழாகவும், சென்ற அந்த நொடிகளைக் குறித்த தான—ஒருவாறு ஓடிமறையும் ஓர் எச்சம் மட்டும் ஆனதான—ஓர் உணர்வோடு கூடிய கூரிய ஒரே ஒரு அகப்பதிவாகவும் சிறுகுகிறது. இந்த இயக்கத்தினிடத்து, அதாவது, அகப்பதிவுகள், அகச்சாயல்கள், புலன்கள் ஆகிய இவற்றின் செலவும் கரைவும் ஆகிய இவற்றிடத்து—தொடர்ந்து உடனுக்குடன் இறந்தொழிதல் ஆகிய இதனிடத்து—'நாம்' என்று

சொல்லப்படுவதை வியப்பாக எஞ்ஞான்றும் உண்டு பண்ணு தலும் அழித்தலும் ஆகிய இவற்றினிடத்து—பிரித்தாராயும் முறை மேல் செல்லாமல் நின்று விடுகிறது.

ஆசிரியர் நோவாலிசு அவர்கள் கருதுகிறபடி, நமது ஆன்மாவுக்கு உண்மை நூலின்—அல்லது, உளக் காட்சியால் ஆய நிறை கல்வியின்—பயன் என்ன வெனில், இடை விடாததும் விருப்பம் மீக் கொண்டதும் ஆன காட்சி நிறையும் ஓர் வாழ்வு வாழும்படி அவ்வான்மாவை மென்மையாகவோ அல்லது தட்டியோ எழுப்புதலே ஆம். ஒவ்வொரு நொடியிலும் கையிலாவது முகத்திலாவது ஓர் உருமுதிர்ந்த அழகு அடைகிறது; குன்றுகள் பக்கலாவது கடலின் கண்ணாவது ஓர் குரல் மற்றவைகளைப் பார்க்கிலும் பெரிதும் இன்பமானதாய் இருக்கிறது; பேர் உணர்ச்சியின் ஓர் துறையோ, ஆன்மக் காட்சியோ, அல்லது, அறிவின் எழுச்சியோ அந்த நொடிக்கு மட்டும் ஒழிக்க முடியாத உறுதியாகவும் நமக்கு இச்சை காட்டி நம்மை ஈர்ப்பதாகவும் இருக்கிறது. 'அநுபவத்தின் முடிவு' என்பதல்லாது அநுபவம் தானே முடிவாகிறது. பல்வகைப்பட்ட நாடக வாழ்வில் குறிக்கப்பட்ட எண்ணிக்கையுள்ள உயிர் நாடிகள் மட்டும் நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவ்வளவிற்குள் உயர்வற்ற தேர்ச்சியான நுண்பொறிகளால் பார்க்கக்கூடிய எல்லாவற்றையும் நாம் எவ்வணம் பார்க்கலாம்? ஒரு முனையிலிருந்து மறுமுனைக்கு நாம் எப்படி மிக்க விரைவாய்ச் செல்லலாம்? சென்று பேரளவினவாய உயிர் உரங்கள் மிகத் தூய்மையான தங்கள் வன்மையோடு கலக்கிற அந்த நடுமுனையில் எவ்வணம் நாம் எப்போது வாழலாம்?

இப்படித் திண்மையானதும் மணியின் ஒளி போன்றதும் ஆன அழற்கொழுந்து எழ எப்போதும் எரிந்துகொண்டிருத்தலும்—இந்தப் பேரின்பத்தைக் காப்பாற்றலுமே இவ்வாழ்க்கையில் வெற்றி அளிப்பதாகும். பழக்கங்களைக் கைப்பற்றுவதே நம்முடைய தோல்வி என்றுகூட ஒரு வகையில் சொல்லலாம். ஏனெனில், எண்ணிப் பார்க்கும்போது, பழக்கம் வேறு

படர்த நிலை வாய்ந்த ஓர் உலகத்தைக் குறித்ததாகும். ஆனால் எந்த இரண்டு மக்களையாவது நிலைகளையாவது ஒரே வகை என்று காணச்செய்வது கண்ணின் மென்மையற்ற நீர்மையே அன்றோ! நம் அடிக்கீழ் எல்லாம் இங்ஙனம் நெகிழும்போது ஏதாவது ஓர் தூய்மையான பேர் உணர்ச்சியையாவது, அல்லது, ஆன்மாவை ஒரு நொடிப்போதாகிலும் தளையினின்று— தன் உயர்நிலையால்—விடுவிக்கிறது எனத் தோற்றுகிற அறிவின் ஓர் உண்மை ஒளியையாவது, அல்லது, புதுமையான சாயங்கள், புதுமையான நிறங்கள், புதுமையான மணங்கள் ஆகிய இவைபோன்ற பொறிகளின் ஏதாவதொரு கிளர்ச்சியையாவது, அல்லது, ஓர் ஓவியப் புலவனின் முடிந்த ஓர் வேலைப்பாட்டையாவது, அல்லது ஒருவனது நண்பனுடைய முகத்தையாவது நாம் உறுதியாகப் பற்றலாம் அன்றோ! ஒவ்வொரு நொடியும் நம்மைச் சுற்றிலும் உள்ளவர்கள்பால் ஏதாவது ஓர் பேர் உணர்ச்சியின் நிலையையும், அவர்களின் பெறுதற்கரிய வாய்ப்புக்களின் மிக்க ஒளிபொருந்திய தன்மையின் கண்ணேயே அவர்களைத் துயர்வுறச் செய்யும்பொருட்டு நேர்கிற—உரங்களின் எதிர்பாராத—ஏதோ ஒருவகைப் பிரிதலையும் கூர்ந்து உணராது விடுதல் பனியும் ஞாயிறும் சேர்ந்த இந்தக் குறுகிய நாளில் மாலைக்கு முன்னமேயே தூங்கினதுபோல் ஆகும். நம் அநுபவம் ஓர் மாப்பெருநிலை என்றும், அஃது அச்சம் தருவதான சுருக்கம் உடையது என்றும் தெரிகிற இந்த அறிவோடு பார்த்தலும் தொடுதலும் செய்யும் பொருட்டு, 'நாம்' என்று சொல்லப்படும் எல்லாவற்றையும் ஒருமைப்படுத்தி, பார்ப்பதன் பொருட்டும் தொடுவதின் பொருட்டும் ஒரு தீர்ந்த முயற்சி செய்யா நிற்கையில், நாம் பார்க்கிற அல்லது, தொடுகிற பொருள்களைப் பற்றிக் கோட்பாடுகளைக் கண்டு பிடித்து நிலைநாட்ட நமக்கு நேரமேயில்லை. மற்று, நாம் செய்ய வேண்டியது என்னவெனில், புதுக் கொள்கைகளை எப்போதும் ஆவலோடு ஆராய்ந்தும், புது அகப்பதிவுகளைக் கோரியும், ஆசிரியர் கோண்ட்டு, அல்லது, ஆசிரியர் ஹேகல் ஆகிய இவர்களுடைய, அல்லது, நம்முடைய எளிய வழக்கமான கோட்

பாடுகளில் ஒருபோதும் தலையிட்டுக் கொள்ளாமலும் இருந்தலேதான். உண்மைநூலின் கொள்கைகளும், அல்லது, கருத்துகளும், நம்மால்—அவற்றின் உதவியில்லாதபோது—பார்க்கப்படாது போகக்கூடியவற்றை உற்றுநோக்கிச் சேர்க்கும் பொருட்டு, நோக்கக் குறிகளாகவாவது ஆராய்ச்சிக் கருவிகளாகவாவது உதவும். "உண்மை நூல் எண்ண அணுவைக் காட்டும் ஓர் கண்ணாடியாம்."—நாம் அறியக்கூடாத ஓர் நலத்தின்பொருட்டாவது, அல்லது நாம் நம்பி வாழாத எண்ண அளவேயான ஓர் கொள்கைக்காவது, அல்லது, வழக்கம் மட்டுமாக இருக்கிறது என்றதின் பொருட்டாவது இவ் அநுபவத்தின் எப்பகுதியை யேனும் கைவிடவேண்டுகிற எந்தக் கொள்கையோ கருத்தோ ஏற்பாடோ நம்மால் ஆதரிக்கப்படக் கூடிய எந்த வகையான உரிமையும் உடையதன்று.

"விண்ணப்பம்" என்னும் நூலின் ஆறுவது பகுதியில் ஆசிரியர் ரூஸ்ஸோ தமக்குக் கல்வியுணர்வு எழுந்ததை விவரிக்கிற இடம், அவரது ஒப்பற்ற அழகமைந்த உரைத்தொகுதிகளில் ஒன்றும். சாக்காட்டின் வரையறுக்க முடியாத ஒருவிதமான பசை அவரை எப்போதும் ஒட்டிக்கொண்டிருந்தது என்னலாம்; தவிர அவரது இளமையில் தாம் ஓர் தீராநோய் கொண்டிருப்பதாக அவர் நம்பினார். எஞ்சியிருக்கும் நாட்களை எவ்வளவு பயன்படுத்திக்கொள்ள முடியுமோ அவ்வளவாகப் பயன்படுத்திக் கொள்வது எப்படி என்று தம்மையே வினவினார்; அப்போதுதான் தாம் கண்ட ஆசிரியர் வால்டேர் அவர்களது ஐயமற்றவையும் புதியவையும் ஆன நூல்களில் உள்ள அறிவின் எழுச்சியினாலேயே அங்ஙனம் முடியும் என்று அவர் தீர்மானித்தபோது, அந்நாள்வரை அவர் வாழ்ந்த வாழ்வினுள்ள எதனாலும் அவர் மனம் சாயவில்லை. இனி, ஆசிரியர் விக்டர் ஹ்யூகோ அவர்கள் சொல்லுகிறபடி, நாம் எல்லோரும் இறக்கும்படி தண்டனை விதிக்கப்பட்டவர்கள்தான். ஆனால், ஒருவகையான குறிக்க முடியாத இடையீட்டோடு அஃது இயைந்திருக்கிறது. நமக்குச் சிறிதுகாலம் உண்டு;

அதன் பிறகு, நாம் இருந்த இடமும் நம்மைச் சிறிதும் அறியாது. இந்தச் சிறிது காலத்தைச் சிலர் பார்க்கிலும், சிலர் உயர்ந்த பேர் உணர்ச்சியிலும், "இவ்வுலகின் குழந்தைகளில் உயர்ந்தோர்" என்பார் மட்டுமாவது புலமைகளிலும், பாட்டுக்களிலும் கழிக்கின்றனர். ஏனெனில், நமது இடையீட்டினை விரிவுபடுத்தலிலும் கொடுத்த காலத்திற்குள் எத்தனை உவகை உணர்ச்சிகளை அடைய முடியுமோ அத்தனையும் அடைதலிலுமே நாம் எய்தக்கூடிய முழுப்பயனும் கிடக்கிறது. வாழ்க்கையின் இந்த விரைவுணர்வையும் அன்பின் பேரின்பத்தையும் துயரத்தையும் நம்மில் பலருக்கும் இயல்பாகவே வரும் பொது நன்மையான, அல்லது, வேறுவகையான ஊக்கத்தோடு கூடிய முயற்சியின் வேறுபட்ட வகைகளையும் கழி பெரும் உணர்ச்சிகள் நமக்குத் தரும். விரைவுற்றும் பல்கியும் உள்ள உளத்தின் இந்தப் பயனை உங்களுக்குத் தரக்கூடியது பேர் உணர்ச்சியே என்றுமட்டும் உறுதியாய் இருங்கள். இயற் புலனைப்பற்றிய பேருணர்ச்சியும், அழகில் ஆசையும், புலமையை அறிதற்குத் தானே விரும்பும் விருப்பமும், அந்த வகையான மூதறிவைப் பெரிதும் கொண்டிருக்கின்றன. ஏனெனில், போய்க்கொண்டிருக்கிற உங்களது நொடிகளுக்கு உயர்வற்றபடி உயர்ந்த நீர்மையைத் தவிர வேறு தருவதில்லை என்றும், அதுவும் அந்த நொடிகளின் பொருட்டே என்றும் தெளிவாய் அறிவித்துக் கொண்டுதான் புலமை உங்களை அணுகுகிறது.

A. பாலகிருஷ்ண பிள்ளை, B. A. M. L.

---

# காழித்தேவாரச் சிறப்பு

(உ௯௧-ம் பக்கத் தொடர்ச்சி)

இவ்வாறாய பல கழகங்களினும் ஓதுவிப்பார்க்கும் ஓதுவார்க்கும் பலசாதனங்கள் ஏனைப்பல நகரங்களினும் அமைக்கப் பட்டிருந்தனவாகப் பலமன்னர்களும் பெரியார்களும் பொறித்துள்ள பல சாசனங்களால் தெற்றென விளங்கும். இக்கழகங்களில் திருமுறைகளின் பெருமை எந்நோக்கத்தோடு ஆராயப் பட்டன வென்பதை இங்கு விசாரிப்போம். இவ்விசாரணை கேவல சகலங்களின் உழன்றுவரும் ஆன்மவர்க்கம் பரம்பொருளின் திருவருளால் சுத்தப்படுவதற்காய சம்புபக்ஷ அணுபக்ஷ முறைகளைப் பற்றிப் பிரமாணம் இலக்கணம் சாதனம் பயன் என்னும் நான்கினையும் உணர்த்தும் நான்கு இயல்களான் நிகழ்வது. இவ்வியல்கள்தாமும் பிரமாணம் இலக்கணம் சாதனம் பயன் என்னும் நந்நான்கு அத்தியாயங்களாக வகுக்கப் படும். இவ்வத்தியாயங்களில் அமைந்த பிரதி அதிகரணங்களையும் திருமுறைப் பகுதிகளின் வைத்துப் பெரியோர் ஆராய்ச்சி செய்வர். இவற்றுள், க. பிரமாணத்திற் பிரமாணம்—சிவஞான கலைகளுக்குப் பிரமாணம் உண்மை நாயன்மாருடைய உபதேசமேயாம். உ. அப் பிரமாணத்தில் இலக்கணம்—அவ்வுண்மை நாயன்மார்கள் உபதேசத்திற்கு விளக்கம் ஆதலின், வேதாகமங்களில் கூடார்த்தமாகவும் சைவத் திருமுறைகளில் ஸ்பஷ்டார்த்தமாகவும் விளங்குவது. அன்றியும் அவ்வுபதேசம் திருமுறைகளாலன்றிச் சந்தான குரவர்கள் சாஸ்திரங்களாலும் விளங்கும். இத்திருமறைகள் யாவும் நவீனமாகத் தோன்றியன வல்ல. "அருள்நூல் பேசிற்று அன்றே." திருமுறைகள் ஞான வித்தைக்கு ஒன்றான காரணம் என்பது மெய்கண்டசாத்திரங்களானும் பண்டாரசாத்திரங்களானும் பெற்ற துணிபு. ௩. அப்பிரமாணத்திற் சாதனமாவது-பிரமவித்தையைப்பற்றிய அந்தரங்க நிச்சயத்தின் முறைமை. இச்சைவ வித்தைக்கு அநுகுணமான ஆராய்ச்சியின் நோக்கம் ஆகிய சைவசம்பந்தத்தைப் பற்றிய நிச்சயம்,

ஆன்மாக்களுக்குப் புறத்தே வேதாகமங்களின் மாத்திரமன்று அகத்தே சைவத் திருமுறைகளிலும் சைவானுபவத்திலும் ஆதாரப் படுமாதலின், திருமுறைகளின் உபதேசத்தாலாகும் அந்தரங்க நிச்சயத்தின் முறைமையையும் நன்கு ஆராய்ச்சி செய்வர். புறச்சமயிகளுக்கும் ஓர்வகையில் கடவுள் வெளிப் பாடுண்டேனும், அதனால் அவர்களுக்கு உண்டாகும் இயலறிவு வெகு சொற்பம். ஆயினும் அவர்களை வைதிக சம்ஸ்காரங்களா னும் ஆகம சம்ஸ்காரங்களானும் புனிதப்படுத்திப் பின்னர் உபதேசிக்கும் சிவஞான போதம் அவர்களுக்கு விளக்கமாதற் பொருட்டு இவ்வியலறிவும் ஓர் உபகாரமாகும். தவத்தின் முதிர்ந்து ஞானபாதத்தைப் பெறுதற்குரியராய் நின்றும், கர்ம சேஷத்தால் புறப்புறச் சமயிகளாயினார் இயல் ஞானம் சிறிது அளவின் அன்றிப் பேரளவிற் செறிந்து சிவநேயம் மலிந்துகிடக் கப் பெற்றாராயின் அன்னோரையும், புறச்சமயம் புக்காரையும், வேத நெறியினின்று ஏழாட்காலும் மிகு சைவத் துறையினின்று மூன்று நாளும் தவறினாரையும், புண்ணிய தேசத்துப் பிறவாதா ரையும் புனிதப்படுத்தற்கும் அன்னோர்க்கு உபதேசம் செய்தற் கும் தேகபந்தத்தைக் களைதற்பொருட்டாக இறைவனும் அவன் ஆணை பெற்ற இறைவர்களும் குரவராதல் வேண்டும். அகப் புறச் சமயிகளுக்கும் அகச் சமயிகளுக்கும் சைவார்த்தத்தைப் பக்குவமறிந்து ஞானகுரவர் உள்ளவாறு உணர்த்தலேயமையும். அக்குரவர்களிடமே இறைவன் அதிட்டான ஆவேச பக்கத்தால் சிறந்து விளங்குவன். ஏனைச் சமயகுரவர் அங்ஙனம் அல்லாரா தலின், பிறப்புரிமையும் ஒழுக்க மேம்பாடும் அமைந்த உத்தம வருணங்களில் வழுவுதலில்லாத நிலைக்கண் நின்றோர்க்குச் சமயா சார சடங்குகளைப் புரிந்து அவ்வாசாரங்களை வழுவாது இயற்றி வரச் செய்வித்தற்கே உரியர். இறைவனுக்குத் திருவுளமுளா தேல் அவரின் நின்றும் உண்மை ஞானத்தை உணர்த்துவன். இவ் வேறுபாடுகளைச் சாஸ்திர சம்பிரதாயங்களில் தெற்றெனக் கண்டுணர்க. சில மேற்குலத்தினர்க்குத் தேக சம்ஸ்காரங்க ளோடே ஆத்ம சம்ஸ்காரங்களும் செய்யப்படுதல், ஜன்ம சுவதந் தரம் என்பது ஒன்று உண்டு என்பதையும், அச்சுவதந்தரம்

அவரைப் பெற்றார்க்குச் செய்யப்பட்ட கர்ம சுவதந்தரங்களால் சுவதந்தரிக்கப்பட்டது என்பதையும், ஆகவே வர்ணாச்சிரமங் களுக்கும் சமயாசாரங்களுக்கும் இவ்விருவகை சம்ஸ்காரங் களும் இன்றியமையாதன என்பதையும், முதல் மூன்று வருணத்தாராயினும் தேகசம்ஸ்காரத்தைப் பெறாரயின் கீழ் நின்ற வருணத்தராகி அவ்வருணத்தராகவே கருதப்படுவாரென் பதையும், இங்ஙனமாய தேக ஆத்ம சம்ஸ்காரங்களின் பேதங் களால் சைவர்களும் பலதிறப்படுவர்கள் என்பதையும், இவ் வேறுபாடும் ஜனசமூக வாழ்வினன்றி மெய்ஞ்ஞானிகளிடத்துக் கோஷ்டியினும் ஞானானுபவ நிலையினும் கவனிக்கத்தக்கது அன்று என்பதையும் உண்மை நூல்கள் வாயிலாக உய்த் துணர்க. இங்குக் கூறியவாற்றால் ஜன்ம சுவதந்தரமும் அத னோடு கர்ம சுவதந்தரமும் அதனோடு ஞான சுவதந்தரமும் உத்தமோத்தமம் ஆனவை எனவும் அவற்றுள் யாவேனும் இரண்டு பொருந்தின் உத்தமமத்திமம் ஆனவை எனவும், ஞானம் நீங்கிய இரண்டு பொருந்தின் உத்த மாதமம் ஆனவை எனவும், சாம்சித்தர்க்கன்றி வைநயிகர்களுக்குப் பிறப்பும் ஒழுக்கமுமின்றி ஞானம் கைகூடாதெனவும் காணலாம். ஆகவே உத்தம குலமும் உத்தமாசாரமும் உத்தம ஞான நூல்களைக் கற்றற்கு ஆவசியகமாக வேண்டப்படுவன. கேவ லம் வைநயிகர்கள் தாமும் பிறப்பொழுக்கமிலரேல் சரியை கிரியா யோகங்களுக்கும் தக்கோராகார். சாமுசித்தர்கள் எக் குலத்திற்றோன்றி எந்நிலையில் நின்று எத்தொழில் புரியினும் அவர்கண்மாட்டு உண்மையிற் சிவசம்பந்தம் காணப்படுதலின், அன்னோர் என்றும் உத்தமோத்தமர்களே. புறச்சமயிகள் தெய் வம் உண்டு என்பதோர் சித்தமுடையவர்களாயினும் அத்தெய் வம் இன்னதென்று அறியார்கள். மனிதனாய்ப் பிறந்தவ னெவனும் இது சன்மார்க்கம் இது துன்மார்க்கம் என்று அந் தக்கரணங்களால் ஒருவாறு அறிவான். திரோதான சத்தியின் தூண்டுதலால் அக்ஷரங்கள் அந்தக்கரணங்களை இயக்க, இவற் றை அவன் உள்ளம் அறிகின்றது. அவ்வுள்ளம் அவனது தீச் செயல்களுக்கு அவனை இகழ்ந்தும் நற்செயல்களுக்கு அவனைப்

புகழ்ந்தும் ஒருவாறு உண்மையை வெளிப்படுத்தி வந்தாலும், அதில் அவன் மேல் வருங் கருமத்தால் சில தீச்சிந்தைகளைக் கலந்து விடுவதால், அவ் ஆன்ம சக்தி குறையும். இனி மனிதனைப் பிறந்த போதே தெய்வம் உண்டு என்னும் அறிவும் நன்றுதீது என்னும் விவேகமும் அவனுக்குக் கலந்திருப்பதால், இவை இரண்டு சேர்ந்து விளங்குவதாலேயே அவன் இயற்கையறிவினனாகக் கருதப்படான். இவ்வறிவு புத்தியினாலும் சித்தத்தினாலும் அவனுக்கு உடன்பாடானது. திருமுறைகளைப் பயிலாதானொருவன் இயற்கையறிவுளனாயினும், பதிபசு பாசங்களின் உண்மையையும் அவற்றின் தடத்த சொரூப லட்சணங்களையும் சாதிக்கு முறைமைகளையும் சாதனத்தின் ஆயபயனையும் உள்ளவாறு காணமல், தேவதாந்தரவணக்கமும் ஆகமங்களின் விதிக்கப்படாத பூஜையும் உண்மையான விதிவிலக்குகளும் அசாஸ்திரீயமார்க்கமும் மிலேச்சதர்மமும் கைக்கொண்டவனாவான். திருத்தேவார மொன்றே திவ்யாகமங்களில் விளக்கிய பாசக்ஷயத்தையும் சிவப்பேற்றையும் இனிதில் விளக்கும் செந்தமிழ் மொழி, இதனை ஓதவோத இயலறிவுள்ளவர்தாமும் ஓர் புதுமையையும் அதிசயத்தையும் காண்பர். காணவே தம் இயலறிவாலும் விவேகத்தாலும் கண்ட தெய்வசிந்தனையும் நீதியும் திருமுறைகளால் நன்கு விளங்குவதால் உண்மை ஞானத்தைப் பின்னர்க்கண்டு அடைவர். பிறப்பு ஒழுக்கங்கள் நன்கமைந்த இவர் சுத்தராய்ச் சிவானுபவத்தில் முதிர்ச்சியடைவர். இவ்வாறு சுத்தராயினார் மீண்டும் பாசங்கள் தம்மைத் தாக்காவாறு இத்திராவிட வேதங்களை அனுசந்தித்து வருவர். இவ்வாறு பாசம் விமோசனம் ஆதற்கும் மீண்டும் பற்றாமைக்கும் இத்திருவாக்குக்கள் இன்றியமையாதன வாதல் கண்டு ஆராய்ச்சி செய்வர்.

(தொடரும்)

P. A. முத்துத்தாண்டவராய பிள்ளை.

---

# நூலாராய்ச்சியின் சாலாப்போக்கு

ஸ்ரீமாந் மு. சி. பூர்ணலிங்கம் பிள்ளை B. A., L. T., அவர்களால் வரையப்பட்டு, செந்தமிழ்ச்செல்வி 2ம் சிலம்பு, 7ம் பரலில் வெளிவந்த "நூலாராய்ச்சி" என்னும் கட்டுரை ஒன்றே நாம் பார்வையிட்டோம். அவ்வாராய்ச்சியால் அவர்களுக்கு வந்தமுடிவு எம்போல்வார்க்குப் பெருத்த கவலையை யுண்டாக்கு வதாயிற்று. அவர்கள் தம் மனம்போனவாறு அவ்வாராய்ச்சி யில் எங்கள் ஸ்ரீ ஞானசம்பந்தப்பெருமானை "மனவெரிச்சலுடை யவர்," "மதமிஞ்சி நாக்குளறுபவர்," "தறுகணர்," "ஈனர்," "நாகரீக ஒழுக்கம் அற்றவர்," அந்தகச்செயலினர்" என்ற இன் னோரன்ன வசை மொழிகளால் இழித்துரைத் திருக்கிறார்கள். நாம் அவர்களது ஆராய்ச்சியைத் துருவிப்பார்த்தெழுதும் இம் மறுப்புரைகொண்டு அத்தனை வசைமொழிகளும் பிள்ளையவர் களின்பாலவா? அல்லது ஞானசம்பந்தப் பெருமான் பாலவா? என்பதை அறிஞர் சிந்தித்து விடைகூறிக்கொள்க.

அப்பர்சுவாமிகள் "விரிவிலா அறிவினார்கள்......ஏற்றதா கும்" என்றருளியது சுவாமிகளது மனக்குளிர்ச்சியைக் காட்டி நிற்கின்றதென எங்கள் புகலியர்கோனை யிகழுமுகத்தாற் றமது சமணப்பற்றை வெளியிட்டுள்ள பிள்ளையவர்கள் கூறுகின்றார் கள். அச்சுவாமிகள் தாமே பிறவிடங்களில் புகலியர்கோன் போன்று "சமண்கையர்," "குணமில்லர்" "கூறையில் மிண்டர்", "முடையர்," "நின்றுணுங்கள்ளர்," "சமண்பிரட் டர்" என்று சமணர்களை இகழ்ந்துரையாடி யுள்ளார்கள். இத னைப் பிள்ளையவர்கள் அறிந்திருந்தும் சுவாமிகளது பாசுரத் தொரு பகுதியைக்கொண்டு அவர்களுக்குச் சமணர்பா லுள்ள வெறுப்பை மறைக்கப் பார்ப்பது ஞாயிற்றைக் கைகொண்டு மறை த்தல் போலாம். பிள்ளையவர்கள் அங்ஙனம் செய்தற்கும், புகலி யர்கோன் வெறுப்பை வெளிப்படுத்தற்கும் அப்பர் சுவாமிகள் வேளாளரா யிருந்தமையும், புகலியர்கோன் பிராமணராயிருந்த மையுமே காரணமாகும். சாதிபற்றி எழுந்தமனவெரிச்சல் நெறிதவறிச் சென்றமையாற்றான் பிள்ளையவர்கள் தமிழ் விரக

ரது புகழை யறியமாட்டாதவரும், அறிந்தாற் பொறுக்கமாட்டாதவருமாயினர்கள். புகலியர்கோன் சமணர்களை யிகழ்ந்துரையாடியது போர்முனைக்கண் நின்று அறம்பேண வந்தார் மறம் காட்டி வந்தாரை அவர்கள் தீமைகளை எடுத்துக் காட்டி இகழ்வது போன்றதோர் ஆண்டகைமையை யுடையதாகும். இவ்வுண்மையைப் பகுத்துணரும் தன்மைவாய்ந்த அறிஞர்கள், மனவெரிச்சலி லகப்பட்டுத் தகைமையை மறந்தது பிள்ளையவர்களா? அல்லது காழிவள்ளலாரா? என்பதைச் சிந்தித்து விடைகூறிக் கொள்க.

பழையாறை யென்னுந் தலத்தில் வடதளி என்னுஞ் சிவாலயத்தைச் சமணர்கள் எச்சிலிலைகளால் மறைத்து வைத்துத் தமது மனப்பாங்கைப் பிள்ளையவர்கள் போன்றார் மகிழும்படி விரித்துக் காட்டியது சரித்திரப் பிரசித்தம். இதனை "தலையெலாம் பறிக்குஞ் சமண்கையருண்—ணிலையினால் மறைத்தால் மறைக்கொண்ணுமோ" என்ற அப்பர் சுவாமிகளது பாசுரத்தால் நாம் விளங்க அறியலாம். இச்செய்தியைப் பிள்ளையவர்கள் படித்திருப்பார்களாயின் "யாங்தொழுங் கடவுளரை வணங்காதவர் பாவிகள் என்னுங் கூற்று நூல் பல பார்ப்பார் கூற்றோமோ?" என்னும் வினாவைப் புகலியர்கோன்பால் நிகழ்த்தாமல் தமது சமணர்கள் பால் நிகழ்த்தியிருக்கலாம். பிள்ளையவர்கள் மதமும் தமக்கு வசப்பட்டிருக்கும். அங்ஙனமின்றி அவர்கள் வினவப்படுவோர் இன்னார் என்பதை மறந்து எங்கள் சம்பந்தப்பெருமானை அங்ஙனம் வினவி இடர்ப்பட்டது தமக்கு மதமிஞ்சி நாக்குழறியமையாலா? அல்லது காழிப்பிரான் பரமத நிராகரணஞ் செய்யுமுகத்தால் சமணர்களைப் பாவிகளென்றது தமக்கு மதமிஞ்சி நாக்குழறியமையாலா? என்பதை அறிஞர் சிந்தித்து விடைகூறிக் கொள்க.

ஞானசம்பந்தப் பெருமான் தம்மேம்பாட்டைத் தமது பாசுரங்களில் பலவிடங்களிலும் விளக்கியுள்ளார்கள். பரசமய கோளரியாகிய அவ்வவதார புருஷரது பெருமை அவர்களொருவருக்கே நன்குதெரியும். அவர்கள் தமது உண்மை யுயர் நிலை

யைத் தாமே யெடுத்துச் சொல்லினும் மந்த மதியினருக்கு அஃ தறிய வாராமை இன்றும் பிரத்தியக்ஷம். ஆகலின் ஆகூழுடையார்க்காயினும் அவர்கள் தம் முயர்வைச் சொல்லியே தீர்தல் வேண்டும். அங்ஙனமின்றி எங்கள் பாலறுவாயர் எம்மனோர் பொருட்டிரங்கித் தம்பெருமையைப்பற்றி யொன்றுஞ் சொல்லா தொழியின் அஃது அவர்களது பெருந்தகைமைக்குப் பொருந்தாத தொன்றேயாகும். உண்மை பொங்கித் ததும்பும் அவர்களது தற்பெருமைக் கூற்றுக்கு "தம்மினுஞ்சிறந்த அறிவொழுக்கவாற்றல் வேறெம் மக்கட்குங் கிடையாதென்று தம் மேம்பாடு கூறுபவர்" என்ற பிழைபட்ட பொருளைக் காட்டத் துணிந்த பிள்ளையவர்கள் தறுகண்மையும், சமணர்கள் பல்லவ அரசனிடம் அப்பர் சுவாமிகளைப் பற்றிக்கோட் சொல்லுங்கால் "தொல்வரம்பின் னெறியழித்த பொறியிலியை—அலைபுரிவா யெனப் பாவி வாயாலஞ்சாதுரைத்தார்" என்றபடி கொண்ட தறுகண்மையும் தம்நயத்தை நாடுகின்றனவா? அல்லது பரசமய கோளரியாரின் தறுகண்மை தம்நயத்தை நாடுகின்றதா? என்பதை அறிஞர் சிந்தித்து விடைகூறிக்கொள்க.

பிள்ளையவர்கள் "வடமொழிநூல் பார்ப்பார் கொள்கையைத் தழுவாமல் அதன்கணுள்ள குறை கொடுமைகளை எடுத்தோதியவர் சமண் சாக்கியராவார் ஆதலால் இவரை யொழித்தல் எம் கடமையேயாம் என்றல் ஈனர் செய்கையன்றோ?" என்கிறார்கள். உலகத்திலுள்ள எல்லா மொழிகளிலும் குறை கொடுமைகளைப் பொதிந்துள்ள பலநூல்கள் இருத்தல் இயல்பென்பதைப் பிள்ளையவர்கள் அறியாமற்போனது பரிதாபம். அன்றியும் சமணர்கள் போற்றிவாழும் தம் ஒழுக்க நூல்கள் பலவற்றையுமே வடமொழியிலிருந்தே பெயர்த்துக் கொண்டார்கள் என்பதைப் பிள்ளையவர்கள் அறியாமற் போனது மேலும் பரிதாபம். இன்னும் சமண் சமயத்தை ஆராயப்புகும் மேல் நாட்டார் பலர் வடமொழிப் பயிற்சி கொண்டே ஆராய்தலைப் பிள்ளையவர்கள் அறியாமற்போனது முன்னைய வற்றினும் பரிதாபம். "In the preceding pages he proves that how all the

ethical rules of both Jains and Buddhists were both copied from the older Bodayana and Apastamba and Gauthama Sutras'' என்ற Dr. H. Jacobi என்பார் கருத்தை ஸ்ரீமான் J. N. நல்லசாமிப் பிள்ளையவர்கள் தமது சித்தியார் ஆங்கில மொழிபெயர்ப்புப் புத்தகத்திற் கூறியிருப்பதை யினியாயினும் பிள்ளையவர்கள் கூர்ந்து நோக்குவார்களாக. இங்ஙனமாக வடமொழியாலேயே வாழ்வெய்திய சமணர்கள் வடமொழி நூற்குறை கொடுமைகளை எடுத்தோதியவர்கள் என்று பிள்ளையவர்கள் பொதுப்படக் கூறி மகிழ்தலும் ஒரு மகிழ்ச்சியாகுமா? இவ்வாறு சமணர்களை மயங்கியறிந்த பிள்ளையவர்களோ? அல்லது அச்சமணரது புன்மையை உள்ளவாறறிந்த எங்கள் ஞானசம்பந்தப் பெருந்தகையரோ ஈனராவர்? என்பதை அறிஞர் சிந்தித்து விடை கூறிக்கொள்க.

சமணரை ''நீசர், செதுமதியர், மதியிலார், மதிகேடர் எனப் பலவாறு தூற்றுதல் புலவர் தொழிலாமோ? என்று பிள்ளையவர்கள் வினவுகின்றார்கள். இவர்கள் தாமும் ஒரு புலவராயின் எங்காழிவள்ளலாரை முற்கண்டபடி தூற்றுதல் பொருந்துமா? ஞானசம்பந்தப் பெருமான் சமணர்களைத் தூற்றியிருப்பினும் அஃது அவர்கள் புகழை எவ்வகையினும் பழுதுபடுத்துதலில்லை. உலகத்தில் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனார்த்தமாக வந்த அநேக அவதார புருஷர்கள் அங்ஙனமே செய்து போந்தார்கள். அத்தகைய புருஷர்களில் ஒரு வகையினர் கொடியார் தமக்குச் செய்யுங் கேடுகளைத் தமது பொறையால் விலக்கி அக்கொடியாரை நிக்கிரகிப்பர். இவ்வகையினருள் எமது திருநாவுக்கரசர் பெருமான் ஒருவர். புறமதத் தலைவர்களாகிய கிறிஸ்து புத்தர் முதலியோரையும் இவ்வகையினரென நாம் சொல்லலாம். இவ்வகையினர் கொடியாரை நிக்கிரகித்தல் வில்லானது இருந்தாங்கிருந்து தனது வளைவாற் பகைவர்களை நிக்கிரகித்தல் போன்றதாகும். பிறிதொருவகையினர் தம்மையனுப்பிய எல்லாம் வல்ல சிவபரம் பொருளினது அழித்தற்றொழிலைத் தாம் தாங்கிக் கொடியாரை எதிர்ந்து சென்று நிக்கிரகிப்பர்

எங்கள் ஸ்ரீ ஞானசம்பந்தப் பெருமான் இவ்வகையினராவார்கள். விஷ்ணுவின் தசாவதாரங்களுட் சிலபலவும் இவ்வகையுள் அடங்கும். இவ்வகையினர் கொடியாரை நிக்கிரகித்தல் அம்பானது பகைவர்கள் இருந்துழிப் பாய்ந்து சென்று அவர்களை நிக்கிரகித்தல் போன்றதாகும். இன்னும் காழிப்பிரானது சமண்பழிப்புரை பலவற்றுள்ளும் பாண்டிய னரசவைக்கண் ணிகழ்ந்த பழிப்புரைகள் மிகவுங் கருதற் பாலன. அவ்வவையில் பாண்டியன் வீற்றிருந்தான். ஆயிரக்கணக்கான சமண் முனிவர்களும் ஆண்டுக் குழுமியிருந்தார்கள். அப்பேரவையின் நடுவண் நின்று கொண்டு எம் பால்நல்வாயொரு சிறுபாலர் அஞ்சா நெஞ்சினராய் மங்கையர்க்கரசி யம்மையாரைக் குளிர்விக்கும் பொருட்டு அத்தனை சமணர்களையும் நேரில் இகழ்ந்தார்கள். அங்ஙனம் இகழ்ந்த ஞான்று அதனைக் கேட்டுக்கொண்டிருந்த சமணர்க ளத்தனை பேரும் ஒருங்கேயொரு மூச்சுவிட்டிருப்பினும் எங்கள் பாலரு வாயர் புயற்காற்றி லகப்பட்ட பூளைபோ லாயிருப்பார்கள். அவர்கள் அங்ஙனஞ் செய்யமாட்டாமற் போயினமையும், எம் பாலப் பெரியார் அங்ஙனமாகாமல் எறும்வயிரத் தூணேபோன் றசையாமல் நின்றமையும் எம் சிவக்குரிசிலாரது தெய்வீகத்தை நன்கு விளக்குவதாயின. அத்தனை சமணர்களையும் அங்ஙனம் சூத்திர மற்ற பாவைகளாக்கிய சொல்லேறுழவராம் எங்கள் பண்டிதரின் பன் புலவர் தொழிலற்றவா? அல்லது முன்பின் பாராது அசப்பியமாகிய வாயில் வந்தன சொல்லிக் காலங்கழிக்கும் பிள்ளையவர்கள் புலவர் தொழிலற்றவா? என்பதை அறிஞர் சிந்தித்து விடை கூறிக்கொள்க.

பிள்ளையவர்கள் சமணரைக் கருணை வடிவாயுள்ளவர் என்கிறார்கள். சமண்சமயத்தினின்றும் சைவசமயத்திற் புகுந்தமையை அப்பர் சுவாமிகள்பா லுள்ள ஒரு பிழையென்று சிறுருஞ் சொல்லார். அங்ஙனஞ் சமய மாறுத லொன்றனையே ஒரு பெருங் குற்றமாகக்கொண்டு அப்பர் சுவாமிகளைச் சமணர் படுத்திய பாடு பிள்ளையவர்களுக்கு மட்டும் அச்சமணர்களைக் கருணையுடையவர் களென்று காட்டிற்று. இக்கருணைத் திறத்தைப் பிரசங்கிக்க வந்த பிள்ளையவர்களது உடம்பையும் உயிரையும், ஞானசம்பந்த

வள்ளலார் மதுரையில் வந்து குடிபுகுந்த மடத்தைச் சமணர்கள் தீக்கொளுவிய கருணைத்திறம் உருக்காது போய்விடுமா? தண்டியடிகள் நாயனாரது சிவபணிக்குக் கேடுண்டாகும்படி அவரது குறித்தறிகளையும் மண்வெட்டிகளையும் சமணர்கள் பிடுங்கியெறிந்த கருணைச்செய்தியையும் பிள்ளையவர்கள் உருகும்படி அன்னாருக்குத் தருகின்றோம். இன்னோரன்ன அருஞ்செயல் செய்த சமணர்களின் கருணைத் திறமையில் ஈடுபட்டுத் தம்வசமழிந்து உருகிப்போன பிள்ளையவர்களும் அவர்கள் தாங்கும் சமணர்களும் கருணை வடிவினர்களா? அல்லது வலிகெழுகுண்டர்க்கு வைகைக் கரையன்று வான்கொடுத்த வள்ளலார் கருணை வடிவினரா? என்பதை அறிஞர் சிந்தித்து விடைக்கூறிக் கொள்க.

பிள்ளையவர்கள் சமணர்களைக் காமவெகுளிமயக்கின் வெற்றி வீரர்கள் என்கிறார்கள். அவர்கள் அங்ஙன மல்லரென்பது முற்காட்டியவற்றால் நன்கு விளங்கும். எங்கள் காழிவிரகர் தமது பதினாறாவது வயதில் மணந்த கற்பகப் பூங்கொம்பன்னாரைச் சுகிக்க உரிமையிருந்தும் அவ்வாறுசெய்ய ஒருப்படாதவராய் மணப் பந்தரின்கண் அவ்வம்மையாரைக் கைப்பிடித்தவாறே முத்தியிற் கலந்தார்கள். இச்சரித்திரத்தைப் படிக்கும் எவன்தான் எங்காழிவிரகரை வீரர்வீரன் என்று சொல்லமாட்டான்? அத்தகைய வீரர் பெருமான் வெற்றரையோடு கூடியவர்களையும், ஊத்தை வாயர்களையும், மயிர் பிடுங்கிகளையும், அழுக்குடம்பர்களையும் தம்மினத்தவராகக் கொள்ளாமை ஒரு குற்றமா? அப்பர்சுவாமிகள் சமண்புகுந்து அம்மணமாய்த் திரிந்த தம் நிலைமைக்கு "காவிசேர் கண்மடவார் கண்டோடிக் கதவடைக்குங் கள்வனேன்" என்று கூறி நாணுகிறார்கள். அம்மணமாய்த் திரிவோர்கள், ஊத்தைவாயர்கள், மயிர் பிடுங்கிகள், அழுக்குடம்பர்கள் ஆகிய சமணர்களைத் தம்மினத்தவராகக் கொள்ளுதல் வேண்டுமென்று பிரசங்கிக்கும் பிள்ளையவர்கள் அப்பிரசங்கத்தோடமையாமல், சிறிது காலமாயினும் சமணரது அநாகரீக ஒழுக்கத்தில் நின்று பயின்று, அநாகரீகத்தின் விழுமிய தன்மையை இவ்விருபதாம் நூற்றாண்டு மக்கட்கு அப்

பயிற்சியில் நின்றவாறே வெளிவந்து காட்டுவார்களாக. அங்ஙனமாயின் உலகமும் எங்கள் ஞான சம்பந்த வள்ளலாரை நாகரீக ஒழுக்க மற்றவர்களென்று சொல்லுதலுங்கூடும். அதுவரை எங்கள் பெரியார் சமணர்களைத் தம்மவராகக்கொள்ளாமல் ஒறுத்தமைபற்றி நாகரீக ஒழுக்கமற்றவர்களாவார்களா? அல்லது பிள்ளையவர்கள் அநாகரீகத்தை நாகரீகமென மயங்கி அநாகரீகர்களைத் தம்மினத்தவரெனச் சொல்லி அன்னாருக்கு மீளா ஆளாகிய அந்தகச் செயலினராயினமைபற்றி 'நாகரீக ஒழுக்கமற்றவர்களா? என்பதை அறிஞர் சிந்தித்து விடை கூறிக்கொள்க.

பிள்ளையவர்கள் 'தமிழணங்கை நலனுறச் செய்தவர் சமணர்' என்கிறார்கள். "இறையனாரகப்பொருள் முதலான இலக்கணங்களையும், தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம், சிவஞானபோதம், சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம், பட்டணத்துப்பிள்ளையார் பாடல் முதலிய இலக்கியங்களையும் ஓர் பொருளாக எண்ணாது, நன்னூல், சின்னூல், அகப்பொருள், காரிகை, அலங்காரம் முதலிய இலக்கணங்களையும், பத்துபாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, இராமன் கதை, நளன்கதை, அரிசந்திரன் கதை முதலிய இலக்கியங்களையும் ஓர் பொருளாக வெண்ணி, வாணாள் வீணாள் கழிப்பர், அவ ரிவைகளிருக்கவே அவைகளை விரும்புதலென்னெனின், பாற்கடலுள் பிறந்து அதனுள் வாழு மீன்கள் அப்பாலை விரும்பாது வேறு பலவற்றை விரும்புதல்போல அவரது இயற்கையென்க" என்னும் பெரியார் கூற்றுப்படி தமிழணங்கை நலனுறச்செய்தார் எங்காழிவிரகரா? அல்லது சமணர்களா? என்பதை அறிஞர் சிந்தித்து விடைகூறிக்கொள்க.

உண்மையையறிந்துகொள்ளும் அறிவும், ஆற்றலும், காதலுமில்லாதார், "வலிகெழுகுண்டர்க்கு வைகைக்கரையன்று வான் கொடுத்தவர்" "தமிழாகரன்" "நல்ல சங்கத்தொன்றும் புலவர்கள் யாப்புக்குரிய பொன்னடியையுடையார்" "மலைமகள் புதல்வர்" "துன்றிய பன்னுதமிழ் பதினாறாயிர நற்

பனுவல் மன்னுபுவியவர்க்கு வாய்ப்ப அவதரித்தவள்ளல்'' ''மன்னர் தொழுதிறைஞ்சு மணி'' ''நிறைகுணத்தொருவர்''. ''பண்டிதரின்பன்'' ''ஆணை நமதென்னவல்லான்'', ''கத்தித் திரிபிறவிச் சாகரத்துளாழாமே, பத்தித் தனித்தெப்பம் பார் வாழத்தந்தபிரான்'', ''ஒண்முத்தமிழ் பயந்தான்'' எனப் பல வாறு ஆன்றோர் வழுத்தி மகிழ்ந்த எம்சைவசிகாமணியை இகழ் தல் வியப்பன்று. அஃது அறிவுபோ லடர்ந்தெழுமறியாமை யின் வலியே. எமது சைவசமயச் செல்வர்கள் அவ்வெற்றுரை களில் மயங்கிச் சிவத்துரோகத்துக்கு ஆளாகாமலிருத்தற் பொருட்டும், காழியர்கோன்மாட்டுத் தமக்குள்ள அன்பை வளர்த்து உய்திபெறும் பொருட்டும் அன்னார் திருநோக்கத் திற்கு நாம் எமது கட்டுரையைக் கொண்டு வருகின்றோம்.

கடயம், ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை.

குறிப்பு:—இது குறித்த வேறு மறுப்புக்கள் இனி வேண்டப்படா.

---

# பொய்கையார்

(உசுரு-ம் பக்கத்தொடர்ச்சி)

இனி, இருவரது இடமும் ஆராய்தற்பாலது. ஆழ்வார் தோன்றியவிடம் 'கைதைசேர் பூம்பொழில்சூழ் கச்சிநகர் வந் துதித்த பொய்கைப்பிரான் கவிஞர் போரேறு' என்றபடி கச் சித்திருப்பதி ஆகும். சங்கப்புலவர் இடமோ 'கானவந் தொண்டி அஃதெம்மூர்' என்று அவரே புறப்பாட்டிற் கூறி யிருத்தலின், மேல்கடற் கரையிலுள்ள தொண்டிநகரம் என்ப தாகும். அவரது பிறப்பிடம் தொண்டியன்றென வேறு ஆத ரவு காட்டி மறுக்கப்படின், அப்பொழுது, அவர் அங்கு நெடுங் காலம் வதிந்தமைபற்றியோ, தம் ஆருயிர்த் தோழனாகிய சேர மானது பதியாதல் பற்றியோ அங்ஙனம் கூறினாரவரென்று கொள்ளவேண்டும். இவ்வாற்றால் இருவரும் ஓரிடத்தின ரென்பது பெறப்படுமாறில்லை. இருவரும் பிறந்த குடியும் அறி தற்கு வழியில்லை.

மற்று, இருவருடைய பண்புகளையும் ஆராயலுறின், ஒருவர் இறைவனது பொருள்சேர் புகழ்பாடும் புலவர்; மற்றொருவர் நாக்கொண்டு மானிடம் பாடும் புலவர். இங்ஙனம் ஐயங்காரவர்களே எழுதியிருப்பது முன்னர்க் காட்டப்பட்டது. அவர்கள் 'நாக்கொண்டு மானிடம் பாடேன்' என்னும் திருமழிசையாழ்வார் வாக்கினைக் குறிக்கொண்டு எழுதியிருப்பது ஆழ்வார்களனைவரும் மனிதரைப் பாடாத மாண்புடையரென்பது காட்டுதற் பயத்ததாகும். பொய்கையாழ்வார் பாட்டுக்களே அவரியல்பினைப் புலப்படுத்தா நிற்கும். அவர்,

"வாயவனை யல்லது வாழ்த்தாது கையுலகம்
தாயவனை யல்லது தான்தொழா—பேய்முலைநஞ்
சூணாக வுண்டா னுருவொடுபே ரல்லால்
காணாகண் கேளா செவி" (11)

"நாடிலும் நின்னடியே நாடுவன் நாடோறும்
பாடிலும் நின்புகழே பாடுவன்—சூடிலும்
பொன்னாழி யேந்தினான் பொன்னடியே சூடுவேற்
கென்னாகி லென்னே யெனக்கு" (88)

என முதற் றிருவந்தாதியிற் பாடிய பாட்டுக்களி லிருந்து அவர் திருமால் சீரன்றிப் பிறிதொன்றும் பாடாத இயல்பினரென்பதும், வேறு நலந்தீங்குகளைப் பாராட்டாதவ ரென்பதும் போதரும். புலவர் பொய்கையாரோ எனில், தம் நண்பனொருவனைச் சிறையினின்றும் விடுவித்தலாகிய பயன்கருதிச் சோழன் செங்கணானது போர்க்கள வென்றியையே சிறப்பித்துக் களவழி நாற்பது பாடியவராகின்றார். எனவே இருவரும் தத்தம் பண்பாலும் ஒருநெறிய ரல்லரென்பது தெளியப்படும். ஆயினும் ஐயங்காரவர்கள் அவ்விருவர் பண்புகளிலும் மாறுபாடின்றென்பது காட்டுவான் முயன்று பின்வருமாறு கூறுகின்றனர்:—

"பட்டர்பிரான், திருமங்கை மன்னன் முதலிய ஆழ்வார்கள் தங்காலத்திருந்த அரசர் சிலரைத் தந்திருப்பதிகங்களிற் புகழ்ந்து கூறியிருத்தல்போல, அடியாராகிய பொய்கையாரே தங்காலத்துப் பெருந்தகை மன்னர் சிலரைப் புகழ்ந்து பாடினார்

என்று கொள்ளின் இருவேறு பொய்கையாரைக் கற்பித்துக் கொள்ளுதற்குக் கூறுங் காரணங்கள் சிறிதும் பொருந்தாதன வாகும். சுருங்கச் சொல்லின் அபிமானமும், அஃதின்மை யுமே அங்ஙனமாய கற்பனைசக்திக்கு முக்கிய காரணங்களாகத் தோன்றுகின்றன".

"ஈண்டுக் கூறிய அவ்விருபெரு வேந்தரும், பெருந்தகை யாளராகிய அப்பொய்கை முனிவராலும் புகழத்தக்க பெருமை வாய்ந்தவர் என்றே கொள்க. ஆழ்வார் பதின்மருள் ஒருவ ராய திருமங்கை மன்னன், திருநறையூர்த் திருப்பதிகத்தில்,

"கவ்வைமா களிறுந்தி வெண்ணியேற்ற
கழன்மன்னர் மணிமுடிமேற் காக மேறத்
தெய்வ வாள் வலங்கொண்ட சோழன் சேர்ந்த
திரு நறையூர் மணிமாடஞ் சேர்மின்களே"

"வெங்கண்மா களிறுந்தி வெண்ணியேற்ற
விறன்மன்னர் திறலழிய வெம்மாவுய்த்த
செங்கணான் கோச்சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடஞ் சேர்மின்களே"

என்றிவ்வாறு சோழன் செங்கணானைப் புகழ்ந்திருத்தலால் அவ்வரசனது தெய்வத்தன்மையும் பெருமையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உணரத்தக்கன. இச்சிறப்பெல்லாம் ஏனை யோராகிய சேரமான் கோக்கோதைக்கும் ஒக்குமென்பது."

பொய்கையாழ்வாரே களவழிநாற்பது பாடினாரெனல் அமையுமென்பதற்கு இவை தக்க சமாதானம் ஆமோ என்பது ஆராய்தற்பாலது. திருமங்கை மன்னன் முதலிய ஆழ்வார்களில் யாரேனும் எந்த அரசனையாவது புகழ்ந்து ஒரு பிரபந்தம் பாடியிருக்கின்றனரோ? அவர் தமது பெருமானைப்பாடி வரு மிடத்தே ஒரோவழி அக்காலத் தரசராயினோர் புரிந்த திருப் பணி முதலியவற்றைச் சிறப்பித்துக் கூறின் அதனை மானிடம் பாடல் என்பார் யாருமிலர். கோச்செங்கட் சோழர் தெய்வத் தன் மையும் பெருமையும் வாய்ந்தவரென்பதில் ஐயப்பாடின்று. அவர் திருத்தொண்டர் புராணத்துக் கூறப்பட்ட சிவனடியார் களில் ஒருவர்; சிவபெருமானுக்குப் பலப்பல திருக்கோயில்கள்

சமைத்தவர் ; அதனால் சைவசமய குரவர்களான திருநெறித் தமிழ்வேதம் அருளிய பெருமக்களாலும் சிறப்பிக்கப் பெற்றவர். அவர் சிவபெருமானுக்குத் திருக்கோயில் பல சமைத்த பரிசை "இருக்கிலங்கு திருமொழிவா யெண்டோளீசற் கெழின் மாட மெழுபதுசெய் துலகமாண்ட-திருக்குலத்து வளச் சோழன்" என்று திருமங்கையாழ்வாரும் விதந்தெடுத்தோது வாராயினர். இம்மன்னர் பெருந்தகை தாம் அரசராதற் கேற்பத் திருமால் கோயிற் பணிக்கும் உதவிபுரிந்த காரணத்தானே அவ்வரலாறு தோன்றத் திருமங்கைமன்னன் 'சோழன் சேர்ந்த கோயில் திருநறையூர் மணிமாடம்' என்றிங்ஙனம் கூறுவாராயினர்.

பொய்கையாழ்வாரோ 'வாயவனையல்லது வாழ்த்தாது' 'பாடினும் நின்புகழே பாடுவன்' 'மாயவனையல்லால் இறையேனும் ஏத்தாதென்நா' என்று தம் துணிபுரைத்துப் போந்தவர். அவர் அதற்கு மாறாக ஒரு அரசனது வெற்றிச் சிறப்பையே புகழ்ந்து களவழி பாடுதற்கு நிமித்தம் என்னை? களவழியில் எத்திருப்பணி கூறப்பெற்றுளது? 'கள்நாறும்மே கானலந்தொண்டி-அஃதெம்மூரே அவன் எம்மிறைவன்' என்பதனால் ஓர் சேரமன்னனைத் தம் இறைவன் என்று பாடிய புலவரைப் பொய்கையாழ்வாரென்று கூறுதற்கு ஐயங்காரவர்களது மனம் எங்ஙனம் ஒருப்பட்டதோ தெரிந்திலது. இதனால் சங்கப்புலவர் பெருமையிற் குறைபாடுடையரெனக் கூறுவது நம் கருத்தன்று. பெரியார் பலரும் தாம் தாம் தோன்றிய காலத்துக்கும் ஏனைச் சார்புகட்கும் ஏற்ப வெவ்வேறு நெறிப்பாடும், கொள்கையும் உடையராகின்றனர். சைவசமய குரவர்களையாதல், வைணவ சமயத்து ஆழ்வார்களையாதல் ஏனைக்காலத் தேனையரோடு ஒப்புமைப் படுத்துரைத்தல் சிறிதும் தகாதென்பதே எம் கருத்து.

இனி, களவழி நாற்பது, பொய்கையாரது முதற்றிருவந்தாதி இவ்விரண்டின் நடைப்போக்கை ஆராயினும் இவை ஒருவரால் இயற்றப்பட்டன என்று கோடற்குச் சிறிதும் இடனின்று. இதுகாறுஞ் செய்துபோந்த ஆராய்ச்சியால் சங்கப் புலவராகிய

பொய்கையாரும், திருமாலடியாராகிய பொய்கையாழ்வாரும் ஒருவரல்லரென்பது நிலைநாட்டப்பட்டமை தெள்ளிதின் விளங்கா நிற்கும். இங்ஙனம் இன்றியமையாது வேண்டற்பாலவாய ஆராய்ச்சி நெறிகள் பலவும் அவர்கள் வெவ்வேறவர் என்பதனை வலியுறுத்தி நிற்கச்செய்தே, வேறு நெறியானே ஒருவரென்று காட்டமுயலுதல் பயனில் செய்கையே. எனினும் அவ் வேறு நெறிதான் அவர்கள் ஒருவரே யென்னும் தம் கொள்கைக்குப் பற்றுயது எனக் காட்டியவழி அதனையும் ஏற்று ஆராய்தலே சால்புடைத்தாகலின் ஐயங்காரவர்கள் காட்டும் பிறிதோ ராதரவையும் இனி ஆராய்ந்து காண்பாம். அவர்கள் எழுதியிருப்பதனைப் பின்வருமாறு சுருக்கிக் காட்டுதல் அமையும் :—

"யாப்பருங்கல விருத்தியில் 'பொய்கையார் வாக்கு' என்னுங் குறிப்புடன் பல செய்யுட்கள் மேற்கோளாகக் காட்டப் பட்டுள்ளன. அவற்றுட் சில, இம்மை மறுமை முக்காலமு முணர்ந்த இருடிகளாற்செய்யப்படும் ஆரிடச்செய்யுட்கு உதாரணமாகக் குறிக்கப்பெற் றுள்ளன. அச்செய்யுட்களில் இருடித் தன்மை சிறிதும் புலப்படாதிருக்கவும் அவை ஆரிடமாகக் காட்டப்பட்டமையான் களவழிபாடிய பொய்கையார் இருடித்தன்மை வாய்ந்தவரென்று கொள்வதில் இழுக்கொன்றுமில்லை. பொய்கையாழ்வார் தெய்வத்தன்மை வாய்ந்த பெரியாரென்பது வெளிப்படையாகலின் அவரைச் செந்தமி ழிருடி யென்று கொள்வது பொருத்தமே. அவ்விருத்தியுரைகாரரும் வேறு செய்யுட்களைப் பொய்கை வாக்கு எனப் பெருமையாய்க் கூறிவந்ததுபோலவே பொய்கையாழ்வா ரியற்றிய அந்தாதியிலிருந்து 'பாலன்றன துருவாய்' 'எளிதிலிரண்டடியும்' என்னும் இரண்டு வெண்பாக்களை யெடுத்துக்காட்டி 'இப்பொய்கையார் வாக்கினுள் முற்றியலுகர மீறுய்வந்தன' என்று குறித்திருக்கின்றனர். இவ்வாற்றால் யாப்பருங்கல விருத்தியில் பொய்கையார் வாக்கு என்று குறிக்கப்பட்ட பாடல்களும், புறநானூற்றிற் கண்ட செய்யுட்களும், களவழியும் பொய்கையாழ்வார் அருளிச் செய்தனவாகவே கொள்ளவேண்டும் என்பது." (தொடரும்)

பண்டிதர், மு. வேங்கடசாமி நாட்டார்.

# மறுப்பு எழுதும் முறை

உண்மையை முற்றிலும் உணர்தல் யாவருக்கும் அரியதாயினும் ஒவ்வொருவரும் உண்மையாராய்ச்சி செய்ய வேண்டுவது இன்றியமையாதது. அங்ஙனம் ஆராய்ச்சி செய்யுங்கால் ஒருவருக்கு ஒன்று நன்றாகவும் பிறிதொருவருக்கு அஃதே தவறாகவும் தோன்றுதல் இயல்பே. அதற்குக் காரணம் மக்களுடைய சிற்றறிவு. அச்சிற்றறிவுதானும் பற்றுக் கோட்டின் வயப்பட்டால் ஒளி மழுங்கிப் போகும். ஆதலால் 'காய்தல் உவத்தல் அகற்றி ஒரு பொருட்கண் ஆய்தல் அறிவுடையார் கண்ணதே' என்றார் பெரியர். முதல்வனையும் அவனருள் பெற்ற பெரியோரையும் ஒழித்தொழிந்த ஏனையோர் யாவருக்கும் உள்ள அறிவு சிற்றறிவே எனினும் ஒருவருக்கும் மற்றொருவருக்கும் அச்சிற்றறிவிலேயே வேறுபாடுகள் உண்டு. அவ்வேறுபாட்டின் காரணமாக ஒருவருக்கு உண்மை நன்கு புலனாகும்; மற்றொருவருக்கு அவ்வாறாகாது. உண்மையறிந்தோர் உண்மையறியாதவருக்கு அதனைத் தெரிவிக்கப் புகுந்தால் பின்னவர் கொள்கைக்கு அது மறுப்பாக அமையும். தங்கொள்கையை ஒவ்வொருவரும் நன்கு போற்றுவதும் அதற்கு எதிர் கோள் கூறுங்கால் சிறிது வருந்துவதும் இயல்பே. ஆதலால் மறுப்புக்கூற முன்வருவார் அதனாலாகும் பயன் மறுக்கப்படுவோருக்கு எய்துவிக்கும் கருத்து முற்றுப் பெறவேண்டுமாயின் அம்மறுப்பினை மிகவும் நயமாகக் கேளார் பிணிக்குந் தகையவாய் உண்மை உணர்ந்த காலத்தே தங்கொள்கை தவறு என்று எதிரி உணர்ந்து தம்மை நொந்து கொள்ளும் வண்ணம் எழுதப்படல் வேண்டும். அவ்வாறு செய்யாக்கால் எதிரிக்கு அது பயனிலதாய் முடிதலோடு பகைமையையும் விளைத்தல் கூடும்.

அது காரணமாக எதிரிமறுப்பின்மேல் மறுப்பு எழுதுதற்கும் பெரும்பான்மையோர்க்கு உண்மை ஈதென உணராமல் மயங்குதற்கும் இடந்தந்து பயனில் செயல் செய்தல் கூடும். மறுக்கப்படுவோருக்கு உண்மை யுணர்ச்சி கைவரும்படி செய்

வதே பிறருக்கும் அவருக்கும் செய்த பேருதவியாகும். ஆதலால் மறுப்பெழுதுவோர்கள் எதிரி அறியாது கூறுவதைப் பொருள் படுத்தி, சினங்கொண்டு மிகையாயினவற்றைக் கூறாமல் எதிரி அறிவு அவ்வளவிற் றென்று அறிந்திரங்கி எதிரியை எவ்வாற் றானும் இழித் துரையாமல் அவர் கூறும் தப்புக் கொள்கை களையே திறம் பெறக் கண்டித் தொதுக்குதல் சிறந்த தென்னும் உண்மையைக் கைக்கொள்ள வேண்டும். உண்மையில் வசை யில்லாரைப் பிறர் வசைகூறுவதால் அவருக்கு யாதோர் இழுக்கு மில்லை. வசை கூறினாரைப் பிறரும் வசையே கூறினால் அதன் பயன் சொற்போர் விளைத்ததே யன்றிப் பிறிதில்லை. வசை கூறாது உண்மையை நாட்டினால் வசைகூறினார் தாமே வாயடங் கிப்போவர். ஆதலால் வசையிலா மறுப்பே வடுவிலா மறுப்பு என்பதை மறுப்பெழுதுவோர் உணர்ந்து கொள்க.

உண்மை நாடுவோன்.

---

## திருக்கற்குடிச் சிவனடியார் திருக்கூட்டம்

இத்திருக்கூட்டத்தின் ௫, ௬, ௭-ம் ஆண்டுகளின் நிறைவு விழா நிகழும் ஆவணித்திங்கள் ௬-ம் நாள் ஷையூர் கோயில் முன் மண்டபத்தில் பஞ்சாட்சரபுரம், உயர்திரு வாலையாநந்த முனிவர் அவர்களின் தலைமை யில் இனிது நடைபெற்றது. அதுகாலையில் திருவாளர்கள், லால்குடி ஆனரெரி மாஜிஸ்டிரேட் மு. சரவண முதலியார், ந. மு. வேங்கடசாமி நாட்டார் முதலிய பல தமிழ்ப் பெரும்புலவர்கள் ஆண்டுற்று அரியபெரிய சொற்பொழிவுகள் கூறிச் சிறப்பித்தனர். தலைமையேற்றருளிய முனி வர் பெருந்தகையார் நமது சைவ சமய முன்னேற்றத்துக்கு இன்றியமை யாது வேண்டற்பாலவாகிய ஒன்பது கோரிக்கைகளை தமிழ் மக்களின் முன்னரிட்டனர். இஃதன்றி 'சிவனடியார் திருக்கூட்டம்' என்னும் சொற்றொடரை தலையாக்கொண்டு ஆண்டானடிமைத் தன்மை நன்கு விளங்குமா றருளிய சொற்பொழிவு மிகப் போற்றற்பாலது. நிற்க, கடந்த மூவாண்டுகளில் இத்திருக்கூட்டத்தினர் ஷை திருக்கற்குடியில் பல அரிய திருப்பணிகள் ஆற்றிவந்திருக்கின்றனர். இத்திருக்கூட்டம் என்றும் உலவாதிருந்து அருங்கடன் ஆற்றுமாறு இறைவன் இன்னருள் புரிய இறைஞ்சுகின்றோம்.

---

Printed at the Sivakami Vilasam Press, Published by V. Subbiah for the S. I. S. S. W. P. Soceity Ltd., 306, Linga Chetty St. Madras

## காலஞ்சென்ற அமைச்சர் திருவாளர் மா. திரவியம் பிள்ளையவர்கள்

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம் லிமிடெட் அமைச்சர்களில் ஒருவரும் திருநெல்வேலி, K. S. வங்கி மானேஜருமாகிய சைவத் திருவாளர் மா. திரவியம் பிள்ளையவர்கள் 9-9-24 செவ்வாய்க் கிழமை காலை 6-30-மணிக்குத் தமது பருஉடம்பு நீக்கி நுண்ணுடம்பில் இறைவன் திருவடி நீழலடைந்தமை தமிழ் மக்களையும், சைவமக்களையும் பெரிதும் வருத்துகின்றது. அவர்கள் இறப்பதற்கு அரைமணி நேரத்திற்கு முன் 'உடல் வேறு, உயிர்வேறு, மலம் வேறு; எல்லாம் வேறு வேறுதானே' என்று கூறிச் சிவ சிந்தனையுடன் உயிர் துறந்தார்கள். அவர்கள் அன்பும் அருளும் வாய்ந்து செந்தமிழ் மொழியிலும் சைவசமயத்திலும் அழுத்தமான உண்மைப் பற்றுடையவர்கள். சைவ சித்தாந்தத்தின் நுண்ணிய கருத்துக்களைத் தெளிவுபடக் கற்றுணர்ந்தவர்கள்.

### நிறைவேற்றற் கூட்டத்தாரின் இரங்கற் கூட்டம்

10-9-24 மாலை 5-மணிக்கு நமது கழகத்தில் நடந்த நிறைவேற்றற் கழகக் கூட்டத்திற்கு வந்திருந்தவர்கள்.

(க) திரு. M. V. நெல்லையப்ப பிள்ளையவர்கள்
(உ) ,, T. S. துரைசாமியா பிள்ளையவர்கள்
(ங) ,, T. M. சுப்பிரமணிய பிள்ளையவர்கள்
(ச) ,, வ. திருவரங்கம் பிள்ளையவர்கள்
(ரு) ,, P. R. சீதாராம பிள்ளையவர்கள்

### தீர்மானங்கள்

(1) நமது கழகம் நிலைபெறுவதற்கே முதற்காரணராயும், அதன் வளர்ச்சிக்காகப் பெரிதும் ஊக்கத்துடன் உழைத்துவந்தவர்களுமான அமைச்சர் திருவாளர் மா. திரவியம் பிள்ளையவர்கள் நாளது 1100ஆ ஆவணித்திங்கள் 25உ (9-9-24) மங்களவாரம் காலை 6-30-மணிக்குக் காலஞ்சென்ற செய்தியை இக்கழகத்தார் பரிவுடன் பதிவுசெய்கிறார்கள்.

(2) இக்கழகம் அவர்களை இழந்தமை பிறரொருவரால் நீக்கத்தக்கதன்று என்றும் இக்கழகத்தார் உணருகிறார்கள்.

(3) அவர்கள் ஆருயிர் மறுமையுலகில் சாந்த நிலையை அடைந்து இன்புற வேண்டுமென்றும் அவர்கள் குடும்பத்தார் துக்கநீங்கி மன ஆறுதல் அடையவேண்டுமென்றும் இக்கழகத்தார் கடவுளை வேண்டிக்கொள்ளுகிறார்கள்.

M. V. நெல்லையப்ப பிள்ளை, தலைவர்.

## தஞ்சை, கரந்தைத் தமிழ்ச் சங்கம்

கருந்திட்டைக்குடி, இரத்தாட்சி, ஆவணி, உ௫.

நிகழும் இரத்தாட்சி ஆண்டு, புரட்டாசித் திங்கள் ரு, கூ, (20,21—9—24) ஆம் நாட்களில், நமது சங்கத்துப் பதின்மூன்றாம் ஆண்டுத் திருவிழா, சங்கம் பள்ளிக்கூடக் கொட்டகையில் நடைபெறும் என்றும்,

அப்போது, சென்னை மாகாணத்து 'வளர்ச்சிநெறி' அமைச்சர், திவான் பகதூர், திருவாளர் T. N. சிவஞானம் பிள்ளையவர்கள் தலைமை வீற்றிருக்க அருள் கூர்ந்துளார்கள் என்றும்,

அதுகாலை சிறந்த புலவர்களின் அரிய விரிவுரைகள் நிகழும் என்றும், அக்காலத்தில் சைவமக்களும், தமிழ் மக்களும் தமருடன் வந்திருந்து திருவிழாவைச் சிறக்க நடாத்தி இன்புற வேண்டுமென்றும் சங்கத் தலைவர், திருவாளர் த. வே. உமா மகேசுவரன் பிள்ளை பி. ஏ., பி. எல். அவர்கள் தெரிவிக்கின்றார்கள்.

---

## திருக்குறட் குமரேச வெண்பா மூலமும் உரையும்

இதன் முதல் இதழ் கிடைக்கப் பெற்றுப் பெருமகிழ் வெய்துகின்றோம். இஃதொரு புதிய நூல். முன்னோர் நூலின் முடிபொருங்கொத்துப் பின்னும் வேண்டும் விளக்கங்கொண்டு இயன்றது. ஆசிரியர் சிவஞான முனிவர்போன்ற ஆன்றோர் ஆட்சியைச் சான்றாக் கொண்டது. ஆயிரத்து முன்னூற்று முப்பது அருங் குறள்களுக்கும் அமைந்த அறநெறி விளக்கும் வரலாற்றுக்களைத் தாங்கியதாய் தமிழ்க் கடவுளை முன்னிலையாக் கொண்டு இயற்றப்படுவது. கடவுண் மொழியாணியன்று கடவுட்டறிமை வாய்ந்திலங்கும் திருக்குறளுக்கு இஃதொரு சிறந்த விரிவுரை என்றலமையும். இவ்வரும் பெரும் பணியை ஏற்றுக்கொண்ட தமிழ்ப்புலவர் திருவாளர் ஜெகவீர பாண்டியனவர்களுக்குத் தமிழுலகு என்றுங் கடப்பாடுடையது ஒவ்வொரு தமிழரும் இந்நூலைப் பெற்றுத் திருக்குறட்பெரும் பயனை எய்தி இன்புறுவாராக.

இது மாதந்தோறும் 32 பக்கங்களுள்ள இதழ்களாக வெளிவரும். ஆண்டுக் கையொப்பம் ரூபா 4

விலாசம் :— திருவள்ளுவர் நிலையம்,
தூத்துக்குடி.